30. இந்தனமில் லாவெரிதா னெவவண்ணந் தான்றனே
மந்தமாய்ச சாந்தியினை மன்னுமோ—வந்தவிதம
பற்றுபொரு ளற்றுற பாந்தமன முஞசாந்தி
யுறறுவிடுந் தானுக வோய்ந்து.

31. மோகிகை மாயையே மூர்சசிகை சொப்பன
மாகிய விந்நான் கவத்தைகளு—மேக
சுழுத்தியொடு சாககிரனு சொல்லுமிவை யெல்லா
மொழித்துவிட வேண்டு முணா

32. தேகமிதிற் சூக்குமமாச் சேருமுயிா சித்தபுத்தி
யாகுமகங் காரமிவை யாவுக்கு—மேகசித்
தன்னியமே யெனறுசிந்தை யாற்றவே யச்சித்தை
மன்னிடுவா னென்று மதி.

33. நித்திரையி னுனு நினைவாதி யானுநிதனு
சித்தந்தான் மூடமிகச் சீரழியுஞ—சித்தமிதை
யெத்தனததா லேயுணர்ந்தி யேகாமற் றன்னிலையில்
வைத்திடுவாய மேன்மேலும வை.

34. சித்தமெப் போது திரமாகு மெவ்விதத்து
மத்தைச் சலிபபித்த லாகாதே—யித்தனையுஞ்
சிந்திக்க வேண்டுவதின் றுநகேயச் சித்தத்தைப்
பந்தித்து நிசசலமே பண்ணு.

35. ஆசிரயம் பற்றியதா மச்சித்த மங்ஙனமே
யாசிரய மின்றியதா யாக்கிடுக—வாசிரயம்
பற்றுசல நிச்சலமாய பண்ணியந நிசசலததைச்
சற்றுஞ் சலிப்பியா தை.

36. இவ்வெல்லாப பூத விலயமுண் டாகிலிவற்
றெவ்வெவவின் னுமவிமல மேபோல—வவ்வவ்
வுருவம் வியாபித்து மோாமலமி றன்னைப்
பொருவி றியானம புரி.

37. அதுவே சனன மடைநததன் பேரு
மதுதானே பாண்டித்ய மாகு—மெதுதான்
சலனமுறும வாயு சமஞசிதத மென்றுஞ்
சலனமறச செய்சா தனம

38. சிததத்தை மேலேயுந தாரணஞ செய்யறக
மததியிலுங கீழிலு மற்றெங்குஞ—சிததமி
நதரஙக பாவனைவிட் டாசிரய மின்றியதாச
சநததமுஞ செய்திடவே தான்.

39. உறக்கத்தி னின்று முணர்த்திடுக சிதத
முறிற்சலனம பின்ன ரொடுககா—யுறகக
மலேவென்னு மிவ்விரண்டு மற்றநிலை யுற்று
னிலேயிதனி னிசசலமா நில்

40. ஆசிரய மின்றியதா யசிததந தானென்று
மாசறவா லமபமெலா மறறதாய்ப—பாச
மனவவத்தை மன்னிடா மைமேஞய முத்தி
தனதிலக்க ணநதான் றரி.

41 ஆலம்ப மெல்லா மறவிட்டே யமமனத்தை
யேலத் தரிப்பித் திதயத்தே—சாலத
துலககமா யெவவறிவு தோன்றுமோ வஃது
பலககவே யென்றும பழகு

42. அப்பரமாஞ சூனியத்தை யாதியா னித்தேயவ்
வபயாச தற்பரரா யாவரோ—தபபாா
பிறபபிறப்பில் லாத பெருமையுறுந் தான
முறப்பெறுவ ரேயவரென் றோர்.

43 தேவருந் தேவியரு மங்ஙனமே யன்னியமாம்
பாவமற முநதற் பலன்களு—மேவியிடு
மாசிரய மாசிரய ஞானமுமே யானவிவை
மாசமு சாரபநத மால்.

44 தொநதமென் முசிரயஞ் சொல்லப படுமாமத்
தொநதம் விடப்பரந் தோன்றுமே—பநதமில்
சீவன்முத் தன்யோகி தேகத் தியாகத்தா
லாவன் விதேகமுத்த னன்று.

45 உடலை விராகத் தொழித்திடுகை புத்தி
யுடையவராற் செய்ய வொணுதே—யுடலிதனை
யாரம்பித் துள்ளவினை யற்றவுட னிவவுடல
பாரநதா னேயகலும பாா

46 இதயகம லத்தே யகமுருவா மெசசித்
ததுஙிமல நிச்சலமே யாகு—முதிக்கு
மகங்கார நீக்குதலா லச்சித்தே முத்தி
சுகங்கொடுப்ப தென்று துணி.

47. சருவ வுபாதியுஞ் சாரா துளசித்
துருவ மெதுவொன் றுளது—நிரந்தர
மந்தச சிவமகமென் றன்பாற் றியானித்தே
யெந்தவா சததியுநீ யெற்று

48. தேசமுஞ சாதிமுத லாமிவற்றைச சேர்ந்தனவு
மாசகலவர் ணுசிரம மன்னினவும்—பேசுமிப
பாவனைக ளையகற்றிப பற்றியே தன்னிலையின்
பாவனையே யென்றும் பழகு

49 ஒருவனு னெறகுரிய னோரொருவ னிலமற
றொருவற்கில் யானு முரிய—னொருவ
னெவற்குரியன் யானவனைக் கண்டிலேன் யானெற்
கெவனுரியன் கண்டிலேன் யான்.

50. நானே பரப்பிரம்ம நாதனுல குக்கீச
னுனிந் நிச்சய மார்புருடன்—றானேநன்
முத்தனு மன்றி முரண்வழியிற் செலபுருடன்
பெத்தனு மென்றுநீ பேண்.

51 என்றொருவன் றேக மிலனுக வேதன்னைத்
தன்ஞானக் கண்ணினுற் றன்காண—னன்றே
யனைத்தினு மாசை யறவிட்டுச் சாநதி
தனைத்துன்னி யோனுவன் றான்.

52. அசனீச னென்றெல்லா நூற்களினு மார்தா
னிசைக்கப் படுவானே வென்று—மசரீர
னுங்குணமில் லானுன்மா வாமவனே யான்சிறிது
மீங்கிதனி லைய மிலை.

53. விஞ்ஞான மாத்ரன் விசுததன் விமுத்தனு
னெஞ்ஞான்று மெஙகு மிருப்பனு—னஞ்ஞாயத்
தொன்றலனுன் பற்றவிட வொண்ணுனன் றுக்கமில
னென்றும் பிரமமயன் யான்.

54. உச்சி முதலுள்ளங் காலளவா யுட்புறம்
பிச்சருமப் போர்வை யிறுதியா—மிச்சடத்துக்
கன்னியசித் தாய்முழுது மாயமுத மாய்த்தானே
மன்னியவான் மாநான் மதி.

55. இந்தச் சராசரங்கட் கீசனான் றாயுடனே
தந்தையுந் தந்தைக்குத் தந்தையுனா—சிந்தனங்கொண்
டதுரிய நற்பத மாமெனையே சிந்திப்பார்
முத்தி விருப்பார் முனைந்து

56. பிரமன்முன் னாந்தேவர் பேணுமர மாதர்
நரரியக்கர் கந்தருவர் நாகா—நிரையாலு
மெச்சம் பலவாலும் யான்பூச சியனெனையே
யாச்சிப்ப ராரு மறி.

57. அருந்தவங்க டான மனேகவிதத் தாலு
மருச்சிப்ப ரென்னையே யாரும—பரந்த
சரவசர பூதங்கள சார்ந்துளமற் றெல்லா
மொருவனும் யானே யுணர்.

58. தூலனுஞ் சூக்குமனுஞ் சூனியனு மல்லனான்
ஞாலத்தின் பந்துநான் ஞானமயன்—மேலு
நிரந்தரனீ சன்விமல னீடவத்தை யில்லோன்
பிரபஞ்ச மில்லோனான் பின்.

59. அனாதிவிஞ் ஞான மசன்மம் புராணந்
தனாதித யக்குகையிற் றங்கி—யெநாளு
முருவமுல கங்களங்க மொப்புப்பற் றின்றிக்
கருதக்கா ணக்கொளப்போ காது.

60 சனாதனமா யந்தரமில் சற்பிரம்மனா சோக
மெனாநீ யடிக்கடிபா ரேகம—பனானுமெவன்
பாவித்து நிச்சலனா நிற்பன் பரபிரமம
மாவனமு தத்தன்மை யாநந்து

61 ஞானமிவ் வாறு நவின்றிடப் பட்டதா
லானமுத்தி யாரு மடைதற்கு—மானினியின்
றுசார மென்னா லருளப படுமிதுகே
ணீசாவ தானமா நின்று.

62 நீராட லுஞ்செபமு நிததியமோ மம்பூசை
யாரழலின் காரிய மாதியாத—தேருமோர்
சாதனமு மன்றேன் றனகெனறு மின்றுமான்
மாதரசி யேநீ மதி.

63 நேமமுங் கேத்திரபீ டத்தி னிகழுசேவை
நாமவாசச னம்பிதிரா நற்கருமம—பூமருவு
தீர்த்தநல் யாத்திரை தேசாா விரதஙக
ளோர்த்திடவற கிலலையா மொன்று.

64. தருமா தருமந தருபல னில்லை
மருவு திதியுலக மன்னுங்—கருமமிலை
யெல்லாக் கருமமிகநதிடுல காசார
மெல்லா விதத்து மிக

65. சமயவா சாரமே சற்றுமின்றித் தள்ளாய்
சமத்தமாங் கன்மந தளையா—யமையுமாற்
சங்கற்ப மும்விகற்பனு சாதிதரு மனுசாந்த
சஙகத்தை யுந்தூரத் தள்ளு.

66. பலவிதமாஞ் சித்திகளும் பாதாள முன்பா
யிலகுமிர சாயனமு மென்ப—வுலகிற்
பிரத்தியட்ச மாகவே பெற்றாலும பற்ற
லொருவுகவே சாதக னுள்

67 இவையாவும் பந்தகமா மிச்சீவ னுக்கே
யிவைமேலுந தாழ்நதநெறி யீவ—விவைக
ளியாவையினு மபபரம முததிசுக மில்லை
வியாபகமாஞ் சித்துருவம விட்டு.

68 எவ்விசே டத்தானு மெல்லா வவத்தையினுந
தவவலற யோகந தரிததோன—யெவவிததது
மையத்தாற் கேத்திரபீ டத்திற் குதூகலமா
மையலெழின் மற்றிதனை மாற்று

69. இருமிசீ டமபறவை கேள்சதியே தாரு
வுருமுதலா மெலலா வுயிரு—மொருபோது
நாசமுறச செய்யவொணு நல்லறிஞ னுண்மையறி
வாசிரயித் தோனு யறி

70 வேறெதுவுந் தான்பிடுங்க வேண்டா மிலையினையும்
வேறுபடுத் துஞ்செயலும் வேண்டாமே—சீறி
யினுத செயவேண்டா மெவ்வுயிர்க்கும் பூவு
மனுதரவாய்க் கிள்ளவேண் டாம.

71 சுயமாக வேயுதிர்ந்த தூமலர்கள் கொண்டே
செயக்கடவன் பூசை சிவனுக்—கியற்றியிடு
மாரணமுச் சாடனமுன் மற்றவித்து வேடணமும்
பேருற்ற தம்பனமுமம பின்.

72 சுரமொடு பூதங்கோ டுன்னுமா வேச
முரண்வசிய மாகருட மோக—முரைத்தவிக்
குத்திரகன் மங்கள் குயிற்றற்க கற்கட்டை
யொத்தவற்றிற் பூசை யொழி.

73. கேத்திரபீ டத்திற் கிளர்தேவ தைப்பொருட்டாச்
சோததிடுமா முத்திரையுஞ் செய்மகமு—நீத்துமுன்
செய்யவற்றின் வாதனைக டீர்த்தே வியாபகமா
மெய்யறிவு தன்னையே மேவு

74. சமத்துவமே யுற்றுச் சருவாம லாசை
சமனுய்ச் சுகதுக்கச் சார்விற்—சமனுகி
மித்திரர்க ளல்லாதார் மேலுமோட் டிற்பொன்னி
லொத்தகருத் தோனுகி யுற்று.

75. பொறிவிட யத்திலொரு போதும் விருபப
முறைவிடா துண்மமதை யோட்டி—யறிவுரமுற்
றுசைபய மற்றென்று மான்மாவி லேரமிப்பன்
மாசிலா யோகி மதி.

76. சமனுகி நிந்தையிற் சாற்றுதுதி யிற்பின்
சமனுகிச் சாவபூ தத்துஞ்—சமதிட்டி
மன்னிடவே வேண்டுமான் மாறுமலெந்நாளுந
தன்னுயிர்போல் மன்னுயிரிற் றன்.

77 ஒருவுகவீண் வாத முடனுலக கோட்டி
யொருவுக பாழ்ங்கலக மும்பின்—னொருவுக
சாத்திர கோட்டியைச் சாராதே தீச்சொல்லோ
டேத்துநற் சொல்லு மிக.

78 ஈரிடையுங் கோளு மிடம்ப மிராகமுஞ
சாருமம் மாச்சரியந தானும்பின்—னேரிடு
மாசையுங் கோபமு மச்சமுஞ சோகமு
நீசருவ மெல்லமெலல நீக்கு.

79. தொநத மனைத்துந தொடரா தகற்றியே
சநததமுந தான்சனததைச சாராதா—னிநத
வுடமபுடனே யெல்லா முணாநதிடுவா ஞகித்
திடமபெறுதே சார்நதொளிர்வன் றோ.

80. ஞானததி ஞலேயே நன்முத்தி யவ்வண்ண
மேனைய சித்திபய னின்றேனு—மூனமாம
போகத்துஞ சித்தியினும பூண்டுமயல் வேண்டிடுவர்
சாதகரா யுளளவாஃக டாம்.

81. அணிமாதி யானகுண மாநதிடுக வன்றி
யணுகாம லேயஃ தகல்க—வுணர்நதே
விமலமா மப்பதியை வீடுறுத றபபா
னமலமாந தேகி யறி.

82. ஆகநதா னைம்பூத வாகார மங்கேயே
யேகசிவன் ருனு மினிதமர்வன்—பாகமிலா
தெங்கு முறுசிவமுன் னித்தரையி ருமுலகஞ்
சஙகரன் றன்னுருவந தான்.

83. இவ்வறிஞ னைக்கண் டிசைகரண மூன்ருனுஞ்
செவ்வியகந் தஙகனிபூத் தீம்புகையுந்—திவ்வியமா
நீராட லாடையூ ணைஞ்சுருகு மன்பாலீந
தாராரா தித்திடு வார்.

84 அப்படியே வீடுறுவ ராருயிரே யம்முத்தி
மெய்ப்படியு மார்க்க விருப்பமுளா—ரபபுருடற்
பூசைபுரி வாரன்றேன் புண்ணியத்தைப் பாவததை
யேசுபவ ரெய்திடுவா ரெண்.

85 அறிவுடனு சாரமெவை யாசிக்கப பட்ட
தறிவிக்கப் பட்டதெனு லநத—நெறியாவுந
காலஞா னந்தான் கருத்தில்வே றேவினவற்
பாலதெது மாதே பகர்.

இஙஙன மிருபத்துநான்காயிரங் கிரநத மிசைநத ஸ்ரீதேவிகா
லோத்தர மென்னும ஞானகாணடததின்கண
நைட்டிகர்க்கு ஞானசாரவிசார
மென்னும் அறுபததைநதாம்
படலம் சம்பூரணம்



ஸ்ரீ

## சர்வஞானோத்தரம்

# ஆன்மசாட்சாத்காரப்பிரகரணம்

---

### மங்கலம்

நேரிசைவெண்பா

ஆன்மாவா மீசன் குகனுக் கருள்செய்த
வான்மசாட் சாதகார மாகுமீ—தான்மாவா
யென்னகத் தேயிருந தின்றுதமிழ சொலவானம்
முன்னவ னைய முதல்.

### நூல்

1. அன்னசிவன் பின்னு மருள்வான் குகனேநிற்
கன்னியரு சூட்சி யறைவன்மெய்—மன்னவே
நிட்களமா யாவுளுமே நிற்பதாய் நுட்பமதா
யுட்கொள்ளப் போகாதே னும்.

2. எதனு லனுபவமா ஞானநன் கெய்து
மெதனையறிந் தோன்சிவ னேயா—மெதெவர்க்கு
மென்னுற் சொலப்பட்ட தின்றவ்விஞ் ஞானத்தை
யென்னிடத்தி னின்றுகே ளின்று.

3. ஈதுகுரு பாரம பரியத்துப போநததாம்
வாதிகளெல் லாங்காண வாய்க்காதா—மீதுபவ
பநதமுத் திப்பொருட் டாமபரம மாமுகமோ
வெந்தத் தலத்துமுள தே.

4 எவனெல்லா வற்று மிருக்குமித் தேவ
னெவனெல்லா மாகி யிருபப—னெவன்முக
மெங்குமுளா னெண்ணவொணுன் றத்துவமெல் லாந்
தங்கியெலா மிஞ்சியுளன் ருன். [தாணுய்த்

5. தத்துவங்க ளெல்லாமுந் தான்கடநதோன் வாககோடு
சித்தமு நாமமுஞ் சேராதா—னத்த
னவனு னெனவிகற்ப மற்றசித தததாற்
சிவசிந தனையேநீ செய்.

6. என்றுமுள தாய்நிலையா யவ்யயமா யெவ்விகற்பு
மின்றியதா யின்னதெென வெண்ணவொணு—தொன்றி
நிட்களமா ஞான மெதுதா னிகழுமுத [யுள
றிட்டாநத மின்றியதாய்த தேர்.

7 அடையாள மற்றழிவற் ருருமுப சாநதம
விடயங் கடநதொளிர் வேத்ய—மடுக்காது
பாவனைக கையம படரா ததுவேநா
னுவனிதி லைய மிலை.

8. அந்தப் பரதெய்வ மாகுஞ் சிவனுனே
மந்திரங்கள் யாவின் மயனுமம்—மநதிரஙக
ளெல்லாங் கடநதே யிலய சிருட்டிக
ளில்லா தவனுமா மே.

9. திருசியஞ் சூன்யந திரஞ்சரமு மென்றுற்
பரவிடப் பட்டன வாமிச்—சருவமு
நானே யுலகத்தி னுதனெல் லாமென்றுற்
ருனே யிலகுவன தாம்.

10. விவித வுருவத்தால் வேறுவே றாய
புவன நிரைகள் பொருந்திச்—சிவமுத
லிவ்வுலக மீறா யிலகும் பிரபஞ்ச
மவவளவு மென்னினிற்ப வாம.

11. எவவளவு காணப் படுபவோ விவவுலகி
லெவ்வளவு கேட்க வியைபவோ—வுள்வெளி
பற்றியொளிர் யாவும் பராவுமென் றறபரவ
லுற்றவை யாமவையென் றோ.

12 ஆன்மாயா னென்னினு மப்பர மான்மாவாய்த்
தான்மேவ வுன்னுசிவன் றன்வேறு—மான்மேவி
யிவ்வா றுபாசிபபோ னெய்தான் சிவத்துவ
மவ்வாற்ற லாலென் றறி.

13 அன்னிய ஞஞ்சிவ னன்னியனு னேயென்னும
பின்னபா வத்தைப் பெயர்ததிடுக—வன்னசிவ
னுவன்யா னேயென்னு மத்துவித மாகுமிப
பாவனையே யென்றும பழகு.

14. அத்துவித பாவனையே யார்ந்தோனு யெவ்விடத்து
நித்தமு மான்மாவி னிற்குமவ—னத்தனையே
யெல்லாவற் றுந்தனுக்கள யாவினுள ளுங்காண்ப
னில்லைசந் தேக மிதில்.

15. ஏகமா மிவ்வான்ம பாவனையோ டென்றுமுளான்
மோக விகற்ப முனிந்தோனும்—யோகிக்குச
செவ்வேயெல் லாமுணர்தல் செப்பப்பட் டுளளதா
மவ்வேதந் தன்னி லறி.

16. சாத்திரங்கள் யாவற்றுஞ் சன்மமில னீசனென
வேத்திடப பட்டா னெவனோவக—காத்திரமில்
லான்குணமில லானான்மா வாமவனே யாவேனே
யான்சிறிது மைய மிலை.

17 தன்மெய் யறியா தவனே சிருட்டிமுதற்
றனம முறுபசு தானவன்—றன்மெய்
யெவனறிவ னென்று மிருபபான் விசுத்தன்
சிவனவனே யையமிலை தோ.

18. அதனால் விவேகிக ளானோர்நன் காய்ந்து
நிதமறியத தக்கதான் மாநே—ரதுவே
பரவபர பேதம் பருமையணு பேத
மிருவிதமு மாயிலகு மே.

19 பரமநிர் வாணம் பரமா மபரனா
சிருட்டி வகையாற் றிகழும்—பருமையா
மந்திரரூ பம்பகர்வர் சூக்கும மாருத
சிந்தையி னின்றதாத் தேர்.

20 அஃதின்றி யாறு முகனே யனநதவித
மெஃதுரைத்து மென்ன வியமபுதி—யஃது
வியக்கத் தகுனாகொல் விசித்திரமே புத்தி
மயக்கத்திற் கேது மதி.

21. தருமங்கள் யாவுமான் மாவின்கட் டங்கு
நிருமிப்பன் யாது நினைப்பா—லொருமையா
யுன்னியுன்னி யென்றுமதை யுற்றிடுவ னஃததனை
யென்னுமிதி லைய மிலை.

22. இப்படி யான்மவிஞ ஞானமென் றென்ஞலே
செப்பிடப் பட்டது சேர்த்துருட்டி—யெப்படியு
மெல்லாமு மான்மமய மென்றோநதே யான்மசிநதை
வல்லாஞ யென்றுமே வாழ்

23. தெய்வமோ வேதமோ தீயிற்செய் வேள்வியோ
செய்வகையிற் சோபலவாந தடசிணையோ-வெவவகையு
மங்கில்லை நின்மலமா யெங்குமுக மாாநததாய்த
தங்கான்ம விஞ்ஞானஞ சார்.

24. மரணபவ சம்சார மாக்கடன் மூழ்கிச
சரணநா டிசசா ருயிர்கருச—சரண
மருள்வதவ வான்மவிஞ ஞானததை யன்றி
யொருபொருள்வே றின்றெனவே யோர்.

25. பரமாகி யப்பர மரன்மாவை யாவ
ஞரமாக வுள்ளபடி யோர்வ—ஞெருமுயல்வு
மின்றியவன் வீடுறுவ னெல்லா வவத்தைதகளு
மொன்றிடுவ னேனு முணர்.

26. ஆன்மலா பத்தினு மன்னிய மாம்பேறு
தான்மற்றொன் றெங்குமே தானில்லை—யான்மாவை
யென்றுமுபா சித்திடுக விவ்வான்மா யாவனவ
ஞென்றுபர மான்மாவா மோா

27. அல்ல பிராண னபானனுமே யன்றவ்வா
றல்ல வவற்றின்மே லாங்கரண—மெல்லா
முணர்வதுவா யுள்ளபரி பூரணமா மான்ம
வெணநிதமு மெய்துவா யே.

28 அகத்தும் புறத்திலு மேயில்லை யஃது
மிகத்தூரத் தண்மையிலு மேவா—தகளமா
மந்தப பரந்தாம மாநந்தொளிரு மாங்கேநீ
சிந்தையை யென்றுஞ் செலுத்து.

29. குறுக்கொடுமேல கீழிலுமே கூறுபடு முள்ளும
புறத்திலு மெங்குமெப போது—முறப்பெறுஞ
சூனியமாய்த தானே சொலிக்குமான் மாவையே
மேனிதமும் பாவனைசெய் மேல்.

30. சூனியமு மல்ல வசூனியமு மல்லதாஞ்
சூனிய மல்லதுமாஞ் சூனியமாந—தானெங்கும்
பக்கபா தஞ்சற்றும் பற்றாத வான்மாவை
யெக்காலுஞ் சிந்தை யியற்று.

31. ஆமயமோ டாதார மற்றதாய் வர்ணமொடு
நாமரூ பங்களு நண்ணிடா—தாமந்
நிரஞ்சன நிர்க்குண வான்மாவை நீயு
நிரந்தர மாக நினை.

32. ஆசிரய மாலமப மற்றதாய் மானத்தாற்
கோசரமா காதுவமை கூறரிதாய்—மாசிலியல்
மன்னியதாய் நித்தியமாய் மன்னிய வான்மாவை
யுன்னிடுக நாளு முவந்து.

33. வினைகளெல் லாமுமே விட்டு நிராசை
தனையுற்றுச் சங்கந் தணந்து—பினையென்றுந்
தன்னிலே தன்னாலே தன்னிலமர் தன்னையே
யுன்னிட வேண்டு முணர்.

34. தேயமொடு சாதி திகழ்வாணா மாசிரம
மாய விவற்றை யனுசரித்து—மேயபல
சிந்தனைக ளெல்லாஞ் சிதைத்தறிஞன் றன்னுருவின்
சிந்தனையே செய்க தினம.

35. இதுமந திரமா மிதுதே வதையா
மிதுவே தியான மெனலு—மிதுவே
தவமாகு மெண்ணங்க ளெலலாந தணநது
சுவரூப சிநதை துணி.

36 எணண மிலஞந்தா னெண்ணமோ டொன்றியதை
யெண்ணற் கிடனிலதாய்ச் செய்திடுக—வெணணு
மனதையான் மாவிலே மன்னசசெய் தொன்று
மனதா னினையற்க மற்று.

37. சிநதிக்கத் தக்கதல சிநதிகொண் ணுதல்ல
சிந்தை யலததுவே சிநதையுமா—மெநதவோர்
பககமுஞ சாயாப பரமான வான்மாவை
யெக்காலுஞ சிநதைசெய் யே.

38. சிநதைசெய் வாய்தினமுஞ் சிந்தைககெட் டாததையே
சிந்தை நிராசிரயஞ் செய்தேநீ—யெந்தசுக
மத்தத்து வாதீத நிட்களா வான்மாவிற்
சித்தித் திடுமோ செறிநது.

39. நிருவிகற்ப மாகி நினைக்கவொண் ணுதா
யொருமுதறிட் டாந்த முமுதா—யொருவுவமை
யற்றத்தி யந்தமா மஃதுபரா னநதமாய்ச்
சொற்றிடப் பெற்றததிற் றேய்.

40. விடயபபற் றெலலாமே விட்டு மனத்திற்
படரும் விருததி படுப்பா—யடையுமென்
றுன்மனி பாவமன் ரொன்றும தேபரம
வின்ப மெனலாவ தே

41. எததிகரு தேயமு மெல்லாக்கா லங்களுமே
யொத்ததுயோ கததிற்கென் றோதுநூ—லிததனையு
ஞானத்திற் பேதமே நண்ணுவா ணுசிரம
மானவிவற் ருலென றறி.

42 பால்வண்ண மொன்று பசுக்கள பலநிறஙகள
பால்போலு ஞானமெனப பார்த்திடுவர்—சால்புபல
லிஙகமுள வெல்லாம் பசுக்களை யேய்நதவே
யிங்கறிதிட் டாநத மிது

43 யாவினுமுற் றுபபரவி யப்பிரம மெஙகுமுக
மேவிய தாக மிளிர்வதா—லோவலற
வுன்மனத்தை யப்பிரமத் தூன்றியே தேயநதிக்
கென்னுமிவை யெண்ணிடா தே.

44. இப்புவியி லோர்குறியின் ருசிரமா சாரமிலை
யப்பரமான் மாவினிலை யார்நதோனுக்—கபபுருடன்
செய்ததனு லொன்றில்லை செய்திடவு மொன்றில்லை
செய்யென் விதியுமிலை தேர்.

45. செல்லினு நிற்கினு நித்திரை செய்யினும
புல்லினுஞ சாக்கிரம போசனநீர்—கொள்ளினுங்
காற்றுகுளிர வெய்யிற் கலநதிடுங காலுமெவ்
வாற்றினுமெக் காலத்து மற்று.

46. பயமும் வறுமைநோய் பற்றுசுர மந்த
மியைந்திடுங் காலத்து மேதுந—தியங்கானே
யான்மநிட் டன்சாந்த ஞர்நிட் களனாகி
யான்ம திருத்தனு வான்

47. போனாலும வநதாலும போனவன வநதவனு
நானேகன் போகருவா னடினிலே—நானப்
பிரகிருதி தன்மாறப பெற்றதரு மநதோய்ந்
திருந்தோ னிருபபோ னலன்

48. பிரகிருதி காரியமாங் கன்மங்கள் பேசும்
பிரகிருதி கன்மப பிறப்பே—நிருமலன்
யானோர் செயலிலனென் றேயுகத ததுவவித்
தானே னனுசந்திப் பான.

49. அவற்குப் பிரகிருதி யாறபநத மில்லை
யவன்முக்த னும மடைநதா—னவன்றான்
பிரகிருதி காரியமாப பேசுதோ டத்தா
லொருபொழுது மொட்ட லுறான்.

50. ஒளியா லிருளி னுருவ மொழித்து
விளக்கெவ் விதந்தான் விளங்கும்—விளக்கமி
லஞ்ஞானத் துண்டாகி யாரிருளை மாய்த்தொளிருஞ
சுஞ்ஞான சோதியான் மா.

51 நெய்தீர்ந்த தீபந்தா னிர்வாண முற்றிடல்போன்
மெய்யான்ம சிநதை விடாமலே—செய்யோகி
யான்மாவின் கண்ணேயே யார்ந்திருப்ப னான்மாவின்
மேன்மேவ வொன்றின் றுமெய்.

52. குடங்கொண்டு போங்காற் குடத்துளா காய
முடன்செல்வ தாக வுணர்நதுங்—குடநதானே
சென்றிடுவ தாகாயஞ் செல்வதிலை யான்மாவு
நின்றிடுமே யாகாய நேர்.

53. குடமுடை யுஙகாற் குடத்துளவா காய
முடன்மகா காயமோ டொன்றுஞ—சடமா
முடலக லுங்கா லுடலுளவான் மாவு
முடன்பரமான் மாவா யுறும

54. என்றதி காரியா யெல்லா முணரீச [லாப
னன்றதிகா ரத்தொடிவ வாறுறைநதான்—வென்றெல்
பந்தங்க ளின்வீடு பற்றிஞென் முற்றுணர்வோ
டந்தமிலா தெஙகுமுள னும்

55. ஆகமஙக ளெல்லா மறவிட் டமலானம
யோக சமாதியே யுற்றிதன்மே—லாகவய
லொன்றுமே யின்றெறு வோர்நதே மனவிகற்ப
மொன்று முறும லொழிதது.

56. விஞ்ஞான மிங்ஙன் விடாதுன்னி யோகிதா
னெஞ்ஞான்று மெய்துமுட லின்மையச்—சுஞஞானி
யத்தரும தர்மி யகம்புறமு மார்முத்த
னெத்தலமு மேகுவனு மே

57. முற்றுணர் வின்பமொடு மூதறிவு தன்வயம
வற்றல் வரமபில் வலியுமிவை—யுற்றென்று
மாரு நிராமய வான்மா வவன்சிவமே
சேரும் விசுத்தவுடல் சேர்ந்து

58 நாமசெப மார்ச்சனை நன்னீரி லாடலு
மோமமுஞ் சாதனமற ரென்றுமின்—றுமே
தருமாதர் மபபலன்கள் பிண்டமொடு தண்ணீர்க்
கிரியைகளு மில்லையாங் கேள்

59 இல்லை நியமங்க ளில்லையுப வாசமு
மிலலை பிரவிருத்தி யெவ்வகையு—மில்லை
நிவிருத்தி நோபிரம சாரி விரத
மவற்கில்லை யென்றே யறி.

60 அங்கிநீர் வீழ்வசல நின்றுவிழ லற்றுசிவ
துங்கஞா னமுதந துய்த்தசிவ—அங்கனய்
நித்தியனய் நின்மலனய் விட்டுச் சிருட்டிதன்மஞ
சித்தம்போற் சஞசாரஞ செய்

61 சத்தியஞ் சத்தியஞ சததியமென் றேமூன்று
சத்திய மிபபோது சாற்றினே—னுத்தமம்
மிக்க திதிலெங்கும் வேறெதுவு மேதெரியத்
தக்க திலகுகனே தான்

62. அமலனு மூடமதி யல்லனய்ப புத்தி
நிமலனய் நின்மலான் மாவாய்—விமலமாம்
பாவததி னல்விமலம் பார்ப்பவெலா மென்றமலம
பாவித்துப பார்த்திடுவன் பார்.

சர்வஞானேத்தரம்
ஆன்மசாட்சாத்காரப்பிரகரணம் முற்றிற்று.



ஸ்ரீ

# பகவத்கீதாசாரம்

---

## காப்பு

பார்த்தன் றேரினல், வார்த்தை யாலவன்
ஆர்த்தி போககருண், மூர்த்தி காககவே.

## நூல்

### வெண்பா

1. கருணை மிகுநத கருத்தனுய்த துக்கம்
பெருகி விழிநீா பெருக—வருநதுமப்
பார்த்தன் றுயரகலப பார்த்துமது சூதனனிவ்
வார்த்தை யுரைததான் வகுத்து.

2. தேகமிது சேத்திரமாச் செப்பப் படுமிந்தத
தேகததை யாவன் றறிவனோ—தேகியவன்
சேத்திரஞ்ஞ னென்று செபபுவார் தாமதனைப்
பாாத்தறிந தோர்கள பகுத்து.

3. சேத்திரங்கள் யாவுள்ளுஞ் சேர்ந்தே யிருக்கின்ற
சேத்திரஞ்ஞ னென்னைத் தேர்வாயே—சேத்திரஞ்
சேத்திரஞ்ஞன் றன்மை தெரிகின்ற ஞானமே
தேர்த்திடஃ தேயெனக் கொப்பு.

4 ஆன்மாககள் யாவி னகத்து மமாகின்ற
வான்மாயா னுவ னருச்சுன—வான்மாக்கட்
காதியொடு மததியமு மந்தமு மாமிவைக
ளாதியாம் யானே யறி.

5. பிறநதா ரிறககப் பெறுத லுறுதி
யிறநதார் பிறப்ப தெனலு—முறுதி
விலக்கற் கரிய விதியிதினீ வீணே
கலகக முறலேன் கழறு.

6 பிறபபிறப்பில் லானென்றும பின்னு மிவன்முன்
பிறநது கழியப் பெறுனே—பிறவாதா
னென்றுமுளன் சாசுவத னிவ்வுடல்கொல் லபபடி
கொன்றுபடான் றெல்லோனுட் கொள். [னுங்

7. இவன்றுணிகக வொண்ணு னெரிககவொண் ணுதா
னிவனனைகக வற்றவொ ணு னேது—மிவனிதத
னெஙகுமுளன் ருணு வியல்பாற் சனுதனன்
றங்கு மசலனே தான்.

8 எதனு னிறைவெய்து மேயுமிவை யாவு
மதழிவில் லாத தறிவா—யெதனு
மாளாத வபபொருளை மாளச் செயவல்ல
வாளாகா னரு மறி.

9 இல்லா ததனுக் கிருப்பில்லை யுள்ளதனுக்
கில்லாமை யென்ப திலையெனவே—யில்லதுள
தென்னு மிரண்டி னியல்பிதுதாங் கண்டார்மெய்
தன்னை யறிநத தவர்.

10. எங்குமெவற் றும்விண் ணிருநதானு நண்மையினுற்
றங்குமவற் றிற்பற்ருத தன்மைபோ—லெஙகுமே
தேகத திருநதானுந தேகியா மான்மாவுந
தேகத்தி லொட்டான் றெளி.

11 கதிரோன் மதியுங் கனலுமெக் கானு
மதனை யொளிர்விதத லாகா—லதனை
யடைந்தே மடங்காரோ வஃதுபர மாமென்
னுடையவீ டாமெனவே யோர்

12 உதியா தொழியாதென் ருேதிடப் பட்ட
வதுமே னிலையென் றறைவ—ரதனை
மருவித் திரும்பாரோ மற்றஃதென் மேலா
மரியவீ டாகு மறி.

13 மானமிலார் மோகமிலார் மாற்றினுர் சார்பாசை
தானிலைத்தா ரெக்காலுந தனனிலே—யூனசுக
துக்கமெனுந தொநதந தொலைந்தவரா ஞானியரவ
வக்கரவீ டாளு மவர்

14 எவனால விதியை யிகந்திச்சை யேவு
மவவழி தன்னை யடைப்பா—னவனென்றுஞ்
சாராளே சித்தியொடு சாந்தி சுகத்தினையுஞ்
சேராளே முத்திச் சிறப்பு.

15. எல்லா வுயிர்களிலொத் தேகனுய் நாசமுறு
மெலலாவற் றும்பொன்ரு தேயநதோ ளு—யெலலோரும்
பார்பபதற் கொண்ணுப பரமேச சுரனையெவன்
பார்ப்பா னவனேபார்ப் பான்.

16. அன்னிய மெண்ணாத வன்பிறை லென்னையெவ
ருன்னிடுவா ரன்னவர்க்கே யுத்தமனே—யென்னையிவ்
வாறாக மெய்யா யறியத் தரிசிக்கப
பேறாககத் தககோன்யான் பின்.

17 அவரவா தன்மைக கடுத்த படியே
யெவர்கருஞ் சிரத்தை யெழுங்காண்—புவியிற்
சிரத்தை யுருபுருடன் சேர்சிரதகைக் கொத்தே
புருடனு மாதல் பொது.

18 சிரதகையுள் ளோனே திருத்திப் பொறியைக்
கருத்தில் விடாதே கருதி—மருவுவான்
மெய்யறிவு மேவிபபின் மேலான சாந்தியினை
யெய்துவான் சின்னாளி லிங்கு

19. என்பாலே சித்த மிருத்தியெப் போதுமுள்
ளன்பாலே பத்திசெயு மன்பருக்—கென்னையவர்
சாரவா ரெதனாலச் சற்புத்தி யோகத்தை
யீவேனு னெனனருளா லெண்.

20. அன்னவ ருளளத் தமர்நதே யருளதனாற்
றுன்னுமறி யாமையாந தொல்லிருளை—மின்னு
மறிவாம் விளக்கா லறவே யிறுதி
யுறச்செய்வேன் யானென் றுணர்.

21. அறிவா லெவர்த மகத்தறி யாமை
யறவே யழிநத தவர்த—மறிவும்
பரிதியைப போலப் பரத்தை யொளிரப
புரிவித் திடுமப பொழுது.

22. மேன்மை யுறப்பொறிகண் மேவும் பொறிகட்கு
மேன்மன மம்மனதின் மேன்மதி—தான்மதியின்
மேன்மையா யாவன் மிளிர்வா னவன்றன்னை
யான்மாவா மென்ன வறி

23 மதிக்குயர்விவ் வாறு மதித்தே மனத்தை
மதியா னிறுவியான் மாவின்—மதிசேர்
விசயா செயிப்பாய் வெலற்கரிய காம
நிச்சத் துருவுருவை நீ.

24. எரியு மெரியு மெரிகருமமை யெல்லா
மெரித்துநீ றாக்க லெனவே—யெரியா
மறிவுங் கருமமனைத்து மெரித்தே
யுறுவிக்கு நீறா வுணர்.

25. எவனியக்க மெல்லாமு மிச்சையெண்ண மென்னு
மிவையில் லனவா வியங்கு—மவனே
யறிவெரியால் வெந்தவினை யானவனை யான்றோ
ரறிவொளிசேர் பண்டிதனென் றார்.

26 ஆசைசின மற்றா ரடங்கு மனமுற்றார்
தேசுறாஉ மான்மாவைத் தேரெதிகள்—பாசமில்
புத்த ரவருக்குப் பூரணநிர் வாணசுக
நித்தமனு பூதமா நேர்.

27. தீரஞ்சேர் புத்தியினாற் சித்தத்தை மெல்லமெல்ல
நேரச் செயவேண்டு நிச்சலன—மாரதனே
சித்தத்தை யான்மாவிற் சேர்த்திடுக மற்றெதுவு
மித்தனையு மெண்ணிடா தே.

28. எதுவுந திரமின்றி யென்றுமலே சித்த
மெதெதனை பற்றியே யேகு—மதனின்
றீர்ததநதச் சிததததை யெபபோது மான்மாவிற்
சேர்ததுத திரமுறவே செய்.

29. ஒடுக்கிப் பொறியை யுளத்தை மதியை
விடுத்தாசை யசசம வெறுப்பு—மடுதடுதென்று
முத்தி தனக்கே முனையு முனிவனெவன்
முத்தனே யநத முனி.

30 சகல வுயிாகளிற் றன்னையுந தனனிற்
சகல வுயிாக டமையுமு—விகலமறத்
தன்னினிலைத்தெங்குஞ் சமநோக்குள் ளான்காண்பன்
றன்னிய னநதத் தவன்.

31. அன்னிய சிநதை யணுவுமிலா தென்னையே
யுன்னியெவ ரென்று முபாசிபபா—ரென்னிலே
யென்றுமொன்று மன்னவர்தம யோகக்ஷேம மங்களை
யென்றுந தரித்திடுவேன் யான்.

32. அவர்களின் ஞானி யனனிய பக்த
னவன்விடா யோகியு மாவ—னவனே
பெரிய னவறகுப் பிரியன்யா னெறகுப
பிரிய னவனும பெரிது.

33. எணணில்சென் மங்க ளிறுதி யதின்ஞானி
யெண்ணி யகத்திலென்னை யெப்போது—மெண்ணி
யெலாமவாசு தேவனென வென்னுறுவான் மான்மா
வெலார்க்கு மரிய னிவன்.

34. அகத்துள பற்றெலலா மற்றானெப் போதி
னாகப்புந தனிற்றன்னா னாற்றான்—வருத்தன
ரப்போ தவன்மெய் யறிஞனா னென்று
மெய்ப்போத முற்றார் மிக

35. இகந்தவனா யிச்சையெலா மெய்தாத திற்பற
றகன்றவனா மாயுள்ளா னாதா—னகநதை
மமதையு மிலலாவம மாபுருட னென்று
மமைதி யுறுவா னறி

36. எவன்பா னுலகுபய மேது முறாதோ
வெவனுலகுக கஞசானோ வேது—மெவன்றா
னுவபபுவர்பபு பீதி யுளககலகக மற்றோ
னவனெனக்கு மீபபிரிய னாம.

37. மானமவ மான மருவிற் சமனாகி
யேனையருற் றார்களிலொப பேய்நதோனாய்த்—தானே
தணந்தான் றனையகலாத தன்முயற்சி யெல்லாங
குணங்கள் கடநதோனாக் கூறு.

38. எவனான்மா வின்க ணிரமிபபான் மற்று
மெவனான்மா விற்றிருத்தி யெய்நதா—னெவனான்மா
வின்கண்ணே யின்புற் றிருபபா னவன்றனக்
கென்றுமே செய்வதற்கொன் றின்று.

39. பண்ணும் வினையாற் பயனேது மெய்தலிலை
பண்ணா ததனாலும் பாவமிலை—நண்ணியவற்
கெவ்வுயிர்க ளாலுந்தா னெய்திடத் தககதா
மெவ்வித மாமபொருளு மின்று.

40. உற்றதாம பேற்றி னுவபபுறறான் றொநதங்க
ளிற்றா னழுக்கா றிலாதவ—னொற்றுமை
பெற்ற வவற்றுப் பெறாதவற்றுற் றான்செய்த
னுற்றானும பநத முறான்.

41. ஈச னுயிரக ளெவற்றுளளுஞ சேரிதயத்
தேசத்தி லென்றுந திகழ்கின்றான்—பாசமா
மாயையா லெநதிரஞ்சேர் மன்னுயிரகள யாவினையு
மோயலற நின்றுழற்ற னுற்று.

42 அவனைச் சரண மடைகவெவ் வாற்று
மவனருளாற் சாநதி யடைவா—யவனருளா
லீறில்லா வப்பதமு மெய்துவாய் பாரதனே
பேறிதனி லிலலை பிற

பகவத்கீதாசாரம் ஸம்பூரணம்





# தக்ஷிணாமூர்த்தி தோத்திரம்

## (தாத்பர்யத்துடன்)

---

### அவதாரிகை

உலக சிருஷ்டிகர்ததரான பிரம்மதேவரின் மானசிக புததிரரான சனகர், சனநதனர், சனத்சுஜாதா, சனத குமாரா என்னும் நாலவரும் சகசிருட்டியாதி காரியங்கட காகத தாம் பிறபபிக்கபபடடமையைப பிதாவாற கேட்டு அதில விரக்தியுறறவராய உபசாநதியையே நாடி, அதனைத தெளிவிப்பாரைத் தேடிவரும் அதி தீவிர பக்குவர்களின் பொருடடுப பரம காருணிகனான சாக்ஷாத பரமேசுவரன் ஆலின்கீழ தக்ஷிணாமூர்த்தமாக மௌனமாயத தன்னிலையிற் சின்முத்திரையோடிருககக கணடதும் காநதங்கண்ட இரும்பு போற கவரபபடடவராய அவவாறே யவரருகிற றம்முணமை நிலையி லமாந்தனர். அம் மோனமாந தன்னிலை யுணமையை யுணருஞ் சக்தியிலலா வுத்தம வதிகாரிகடகுத தடையாயக காணபபடு மூலகமாய, காணபானுய, காட்டு மொளியாய விரிநதொடுங்குஞ் சக்தி தன்னையன்றி யின்மையின் 'எலலாந தன்மய' மென்னுஞ் சாவாதமததுவததைத தொகுதது இத தோததிரததால ஆசாரிய சங்கரர் அறிவிக்கலாயினா :—

### மங்கலம்

மன்னுமா முனிவரர் சாநதி மன்னவே
தென்முக மூர்த்தியாய்த் திகழ்நது மோனமாந்
தன்னிலை திகழ்ததியித் துதியிற் றன்மயஞ்
சொன்னவச சஙகரன் றுன்னு மென்னுளே.

## நூல்

### அறுசீராசிரியவிருத்தம்

மவுனமா முரையாற் காட்டு மாப்பிரம வத்து வாலன
சிவநிலைத் தவர்சற் சீடர் செறிகுரு வரன்சிற் கைய
னுவகையோ ருருவன் றனனு ளுவப்பவன் களிமு கத்த
னவனையாந் தென்பான மூர்த்தி யப்பனை யேத்து வோமே

(தாத்பர்யம்.) மௌனமாகிய வியாக்கியானத்தால் தெரிவித்த பரப்பிரம்ம சொரூபனும், பாலனும், பிரஹ்ம நிஷ்ட முனிகளான உத்தம சிஷயர்கள் சூழவிருக்கும் குரு சிரேஷ்டனும், சின்முத்திரைக் கையனும், ஆனந்த மூர்த்தியும், தன்னிலேயே ரமிப்பவனும், சந்தோஷ முகனும், ஆகிய பரமபிதாவான அந்தத் தக்ஷிணாமூர்த்தியை நாம் துதிப்போம்.

உலகுகண் ணாடி யூடநே ருறத்தனு ளருளா னத்தால்
வெளியினிற் றுயிற்க னுப்போல் விளங்கிடக் கண்டு ஞான
நிலையுறு நேரந் தன்னை யொருவனு மெவனேர் காணபன்
றலையுறு குருவா மநதத தக்ஷிணா மூர்த்தி போற்றி (2)

(தா—ம.) உலகமானது கண்ணாடியிற் காணப்படும் பட்டணம்போலத் தனக்குள்ளாகவே யிருந்தும் தன் அறியாமையால், நித்திரையாற் கனவுபோல வெளியில் இருப்பதாகப் பார்த்து (விழித்ததும் தன்னையே காணபதுபோலத்) தன்னை யறியும்போது தானொருவனே யிருப்பதாக யார் பார்க்கின்றனரோ, ஆதி குருவான அந்தத் தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

வித்துளே முளைபோன் முன்னம விகற்பமி லிச்ச கம்பின்
கற்பித மாயா தேய காலகா மத்தாற் பற்பல
சித்திரம விரிப்பன் யாவன் சித்தனு மாயி கன்போற்
சத்தியாற் குருவா மநதத் தக்ஷிணா மூர்த்தி போற்றி. (3)

(தா—ம.) முன்பு விதைக்குள் முளைபோலத் தனக்குள் வேற்றுமையின்றி யிருந்த இவ்வுலகத்தைப் பின்பு, மாயை

யாற பொயயாயத தோறறும் தேச கால காமவசததா லனேக விசிததிரமாக சிததனையும் ஜாலககாரனையும்போலத தன் இசசை (சகதி) யால எவன் வெளியில விரிக்கின்றானோ, அநதத தக்ஷிணாமூாததி குருவுககு நமஸ்காரம்.

எவனொளி யுண்மை யின்மை யியைபொரு ளிலங்கு நேரே
யெவனது நீயா னாயென றிசைததுணாத துவன்சோநதோரை
யெவனைநோ காணின் மீண்டு மிபபவக் கடல்வீழ் விலலை
தவருறு குருவா மநதத் தக்ஷிணா மூர்த்தி போற்றி. (4)

(தா-ம்.) எவனது உணமைப பிரகாசமே பொயயாயத தோறறும் பொருளகளில விளங்குகிறதோ, எவன் தன்னை யடுத்தவர்களை 'தததுவமஸி' (தத—அது, துவம்—நீ, அஸி—ஆனாய) என்னும் வேதவாக்கால நேராக அறிவிக்கின்றானோ, எவனைப பிரததியட்சமாயக கணடாற பின்னுமிச சம்சார சாகரததிற படிவதிலலையோ, தவததினரடையும் அநதக குரு தக்ஷிணாமூர்ததிக்கு நமஸ்காரம்.

பலதுளைக் குடத்துட் டீபப பாய்கதிர் போலயாா ஞானம்
விழிமுதற் பொறிவாய்ப் பாய்ந்து வெளிசரித் தறிநதே
[னென்ன
விளங்கிடு மெவனைச் சார்ந்து விளங்குமிவ் வவனி யாவுஞ
சலமறு குருவா மநதத தக்ஷிணா மூர்த்தி போற்றி (5)

(தா-ம்.) அனேக துவாரமுளள குடததினுளளிருககும் தீபப பிரகாசம் போல எவனது ஞானம் கண முதலான இநதிரிய வழியாய வெளிபபடடு விளகக, 'நான் அறிகிறே' னென்பதாக சுயம்பிரகாசனான எவனை அனுசரிததே இநத ஜகமெலலாம் பிரகாசிககின்றதோ, அநதச சலனமிலலாத தக்ஷிணாமூர்ததி குருவுக்கு நமஸ்காரம்.

உடலுயிர் பொறிகள் புநதி யொன்றுபா ழகமாத் தேர்வர்
மடநதையர் பால ரநதர் மடையரேய் மூட வாதி
மடமையால் விளையு மம்மா மயக்கமே மாய்ககு ஞானத்
தடையறு குருவா மந்தத் தக்ஷிணா மூர்த்தி போறறி. (6)

(நா-ம.) தேகம், பிராணன், இந்திரியங்கள், புத்தி, இவையொடுங்கின சூன்யம், இவற்றையே தானாக, பெண்டுகள், குழந்தைகள், குருடர், சடர்போல வுணரும் மூடவாதிகளது உண்மையறிவின்மையா லுண்டான அப பெருமயக்கத்தைப போக்கும் மயக்கமில்ல ஞானகுருவான அந்தத் தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்

இராகுபற் றிரவி திங்க ளெனவுளன் மாயை மூடப்
பராவுள மொடுங்கத் தூங்கிப் பரவிட வுணருங் காலம்
புராவுறங் கினனு னென்று போதனு மெவன்பு மானுய்ச
சராசர குருவா மந்தத் தக்ஷிணா மூர்த்தி போற்றி (7)

(நா—ம.) ராகுவாற பிடிபட்ட சூரியசந்திரர்போல எப பொழுதுமுள்ள எவன், மாயையின் மறைப்பாற புருட (ஜீவ) னுய, விரிந்தமன மொடுங்கும்போது தூங்கி, மனம் விரிந்து விழிக்கும்போது முன் தூங்கினேனென்று தனது இருப்பை யுணர்கின்றனே, அந்தச சராசர சற்குருவான தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்

குழவிமுன் னனவு முன்னாக கூறுபல் லவத்தை யெல்லாஞ்
சுழலினுங் கலந்தி ருந்தே சொலிக்குமுள ளகமா நாளுங்
கழல்விழு வோர்க்கார் தன்னைக் காட்டுவன் சிற்கு றிப்பாற்
றழல்விழிக் குருவா மந்தத் தக்ஷிணா மூர்த்தி போற்றி. (8)

(நா—ம்.) குழந்தைப்பருவ முதலனவும், நனவு முதலனவும், மற்றும் எல்லா வவத்தைகளும் மாறி மாறி வரினும், மாறாமற கலந்திருந்து உள்ளே 'நான்' என்பதாக எபபோதும் பிரகாசிக்கும் தன்னை சரணமடைந்தவாகட்குச சின்முத்திரையாலெவன் விளக்குகின்றனே, ஞானக்கினிநேத்திரனை அந்தத தக்ஷிணாமூர்த்தி குருவுக்கு நமஸ்காரம்.

உலகையா ரிபபு மானேக் குறும்பல நனைக்க னுவிற்
கலங்கியே மாயை யாலே காரிய கார ணம்பின்
றலைவனுந் தாசன் சீடன் குருமகன் றந்தை யாதி
தலமுறு குருவா மந்தத் தக்ஷிணா மூர்த்தி போற்றி. (9)

(நா-ம்.) உலகத்தை, காரியம் காரணம், தலைவன் (உரியவன்) தாஸன் (உரிமை), சீடன் குரு, மகன் பிதா முதலிய பேதங்களாக மாயையால மயங்கி நனவிலும் கனவிலும் காணகின்ற இப்புருடனெவனே, உலக குருவான அநதத தக்ஷிணாமூாததிககு நமஸ்காரம்

மண்புன லனல்கால வான மதிகதி ரோன்பு மானு
மென்றெளிர சராச ரஞுசே ரிதுவெவ னெட்டு மூர்தத
மெண்ணுவார்க் கிறைநி றைநதோ னெவனினன் னியஞுசற்
[றின்றுந்
தண்ணருட் குருவா மநதத் தக்ஷிணா மூர்த்தி போற்றி. (10)

(நா-ம்) பூமி, ஜலம், நெருபபு, காறறு, ஆகாசம், சூரியன், சநதிரன், புருடன் என்று சராசரமாயத தோறறுமிது எவனது அஷ்டமூாததமோ, விசாரிபபாாககு பரனுய எங்கும் நிறைநத எவனைக காட்டிலும் அன்னியஞ் சிறிதுமிலலையோ, அவ வதிசாநத கிருபாமூர்த்தியான தக்ஷிணாமூாததி குருவுக்கு நமஸகாரம்.

சருவமுந் தானு நன்றாய்ச் சாற்றுமித தோத்தி ரத்தின்
சிரவணந தன்னு லர்த்த சிநதனந் தியானங் கானம
புரிவதா லெல்லாந தானும பூதிசே ரீசன் றன்மை
மருவிடு மற்று மெட்டா மடிவறு செல்வந தானே (11)

(நா-ம.) சாவாதமதவததை (எலலாம் தானுதலை) தெளிவாயத தெரிவிதத இததுதியைக கேடடல, பொருளை விசாரிததல, அபபொருளைத தியானித்தல, துதிததல செயதலால சாவாதமதவ மஹாசம்பததுளள ஈசவரதவம் சிததியாவதோடு சாசுவதமான அணிமாதி அஷ்டைசவரியமும் தானே சிததிக்கும்.

தக்ஷிணாமூர்த்தி தோத்திரம்

முற்றும்



உ

# ஆன்மபோதம்

---

நேரிசைவெண்பா

## மங்கலம்

ஆன்மாவின் போதமரு ளாசானுஞ் சங்கரனவ்
வான்மாவுக் கன்னிய னவனே—வான்மாவா
யென்னகத தேயிருந தின்று தமிழ் சொல்வானு
மன்னவ னன்றிமற் றூர்

## நூல்

1. தவங்களினாற் பாவந் தவிர்ந்தவராய்ச் சாந்தி
யவிர்ந்தவரா யாசையறுந் தாராய்ப—பவமுக்தி
யாதரமார்ந் தாருக் கடையத் தகுமான்ம
போதமா மீது புகல்.

2. அறிவொன்றே நேர்முக்தி சாதன மாகும்
பிறசா தனங்களின் பேறா—மறிவின்றி
யாகாது முக்தியுற லக்கினியின் றிப்பாக
மாகாத வாறென் றறி.

3. அறியாமைக் குப்பகை யன்றதனாற் கன்ம
மறியாமை தன்னை யகற்றா—தறிவே
யழிக்குமறி யாமையொளி யந்தகா ரக்கும
பொழிக்குமா றென்றே யுணர்.

4 அறியாமை யான்மறை வானதுபோ லான்மா
வறவேயஃ தேகம தாகி—நிறைவா
யிலகுமே தானு யிரியவே மேக
மிலகுமா தித்தனென வே

5 அறியாமை யாநகலக்க மாருமுயிர தூய்தா
மறிவுப பயிற்சியி னலவ—வறிவு
மகற்றியறி யாமை யழியுமே நீர்மா
சகற்றுநதேற் றுமபொடியொப் பாய்.

6. விருபபுவெறுப் பாதி விகாரசம் சாரத
திருபபுங் கனவுக இணையஃ—துருபபடும்
போதுமெய் போலப் பொலியுமே போதமுதி
போததுவும பொய்யாகிப் போம்.

7. எவ்வளவு கால மெனவைகுமதிட் டானமா
மவவியய மாம்பிரம மாய்நதறித—லொவ்விடா
தத்துணைக் கால மகிலமுமெய் யாய்த்தோன்றுஞ
சுத்திவெள்ளி போலத் துணி.

8. முதற்கா ரணமாய் முழுதினு தார
மதுவாம் பரேச னகத்தே—யுததி
யுதிருமிழி கள்போ லுலகங்க ளெல்லா
முதித்திருந் தேயு முணர்.

9. சச்சிதா னநதன் சகலத்து முள்ளுள்ளா
னிச்சனும விஷ்ணு நிலைதன்னிற்—சொச்சமாம்
பொன்னிற கடகாதி போலும்பல் தோற்றமெலா
மன்னிய மன்றென் றறி.

10. விண்ணிலே போல விளங்கீச னிற்றென்று
மெண்ணி லுபாதி யிசைநதவிபு—வண்ணாலும
பேத வுபாதிகளாற் பின்னன்போல வானவை
போதலும பூன்றப பொருள.

11 பலவா முபாதிகள பற்றியே நாமங்
குலமா சிரமமுதற் கொளகை—சலத்திற்
சுவைநிற மாதிபோற் சுத்தவான் மாவி
லவைகற் பிதமா மறி

12 கலந்தபெரு மைம்பூத காரிய மாகுங்
கலநதவினை சாரநத கலமாங்—கலகரு
மிடரின்ப போக மெவையும புசித்தற்
கிடமிவ் வுடலென் றிரு

13. வாயுக்க ளைந்து மனமபுத்தி யிரைநதா
யேயுங் கருவிக ளேய்ந்தநுண்—காயங்
கலவாத நுண்பூத காரியமாம போகத்
துலவாத சாதனமா மோர்.

14. ஆதியற் றிற்றென் றறைறயொணு வஞ்ஞான
மோதுவ ராதி யுபாதியா—யோது
முபாதிக ளாமூன் றுடல்களின் வேறு
யுபாதியி லான்மாவை யோா.

15. கோசங்க ளைநதுமுதற் கூட்டுறவா லான்மாவு
மாசிலதே யாயினுமவ வம்மயநே—நேசருவு
நீலபடா திக்கலப்பா னிமல மாம்படிகம்
போலவே யொட்டாப பொருள்.

16. உடறபஞச கோச வுபியாதி யோடுட்
சுடர்பரி சுத்தவான் மாவைத்—திடமான
வுத்தியினாற் குத்தி யொழித்தவற் றையரிசி
யொத்தறிய வேண்டு முணர்.

17. எங்குமே யென்று மிருப்பினு மான்மாவு
மெங்குமே யானமா விலகவிலை—துங்கமாம்
புததியி லேயே பொலியுநிழல் சொச்சமாம
வத்துவிற் றோன்றும் வகை.

18 உடல்கருவி யுள்ள மொடுபுததி மாயை
விடவே றவற்றின் விருத்தி—யுடனே
யெவைக்குமே சாட்சியா மென்றுமான் மாவை
யவைக்கரசன் போல வறி.

19 கருவி களின்றொழில் கண்டவவி வேகி
கருத்தன்போன் றான்மாவைக் காண்பன்—றுரிதமா
யோடுமே கங்கண் டுணாவிலி சநதிரனே
யோடுகிறா னென்பதை யொத்து.

20. ஞானவொளி யான்மாவை நண்ணி யுடல்பொறிகண்
மானதம் புத்தியிவை மன்னுதமக்—கானதொழி
லாற்றிடுமா தித்த னவிரொளியான் மககடொழி
லாறறுவது போலு மறி.

21. தேகம் பொறிக டிகழ்குணங் கள்வினைக
ளாகுமிவை தூயசச்சி தான்மாவில்—மோகத்தாற்
கற்பிபபர் சுதத ககனத்தி னீலமுதற்
கற்பித்தல் போலக் கருது.

22 மனமா முபாதி மருவுகர்த் ததவ
வினமாய வற்றையறி வின்மை—யெனுமயலா
லான்மாவிற் கற்பிப்ப ரபபலைவை நீரேதோன்றும்
வான்மதியிற் கற்பிகரு மாறு

23. விருபபாசை துனபின்பு மேனுமிவை போல்வ
விருப்பவாம புத்தி யிருபபா—விருப்பில்லாத்
தூககத்தி லின்றதனாற் சொநதமவை புநதிக்கே
யோர்க்குகவான் மாவிற்கா மோ

24. அருககன் றனகொளி யப்புக்குத் தட்ப
மெரிக்குட் டணமு மியல்பா—யிருக்கையெனச்
சத்துச்சித தானநதஞ் சாாநித்தனு சுத்தமியல
பொத்ததான் மாவுககென் றோ.

25 சத்துச்சித் தென்னத் தகுமான்ம வம்சமும
புத்தி விருத்தி புகலொன்று—மொ தத
விரண்டோடு மூடகதால் யானறிகின் றேனென்
றொருததன் றொழிற்படுவ னோ.

26 என்றும் விகார மிலதான்மா புத்தியு
மென்றுமறி வின்றியதே யென்றாலு—மொன்றிய
சீவனே யெல்லாந தெரிவான்செய் வான்காண்பான்
பாவத்தான் மாமோகி பார்

27. தன்னைத்தான் சீவனெனத் தாம்பிலே பாம்புபோ
லுன்னியே யச்ச முறுகின்றான்—றன்னைத்தான்
சீவனலன் யான்பரமான் மாவென்று தேர்ந்ததனா
லாவனனா சானா யவன்.

28 ஒருபொருளா மான்மா வொளிர்ககு மதிமுன்
கருவிகளைத் தீபங் கடாதி—பொருவ
வொளியி லவற்று லொருபோது மான்மா
வொளிரகப் படாதென் றுணர்.

29 விளககி னுருவை விளககிட வேறு
விளக்கை விருமபா விதமபோல—விளங்கு
மறிவுருவா மான்மா வறிநதிடத் தன்னைப்
பிறிதறிவு வேண்டப பெறுது.

30. நேதிநேதி வாககினு னீக்கி யுபாதியெலா
மீதியாரு சீவான்மா மீதிலா—வாதியா
மபபரமான் மாக்களி னைக்கியமா வாககியங்கள்
செப்புவ தோாநது தெளி

31 அவித்தையா லானவை யாகமுதற் காணு
மிவைகுமிழி போலவழி வெய்து—மிவற்றி
னயலா மமல வகமபிரம மாமென்
றயராம லென்று மறி

32. உடலுக்கு வேறெனக் குண்டாதன் மூதத
லொடுகுன்றல் சாவுமுத லொன்று—படாநத
வொலிமுற் புலன்களோ டொன்றலெனக் கின்றே
யலன்பொறிகள யானுதலால்.

33 மனமலனு னுதலான் மன்னுதுய ராசை
சினமசச மாதியெனைச் சேரா—வினமாக
வபபிரா ணன்மனமில் லான்சுத்த னென்றுமறை
செப்புகின்ற தன்றே தெளி.

34. நிர்க்குணனி ரஞசன னித்த னிராகார
னிர்விகா ரன்சுத்த னிட்கிரிய—னிர்விகற்ப
னிததமுக தனமுன னிகழத்திடப் பட்டவை
யததனையு நானென் றறி.

35 ஆகாயம போல வகிலத்தி னுள்வெளியான்
சாகாதான் சர்வ சமன்சித்தன்—றேகாதி
யாவறறும பற்றற்று னென்றுமம லன்சலியா
ஞுவஞு னெனறே யறி

36. எதுநிததஞ் சுத்த மெதுமுக்த மேக
மெதகண்ட வின்பிரண் டில்ல—தெதுசத்துச
சிததனநத மாகுந திகழப பரபிரம
வததுயா னேயா மதி.

37. நிரந்தரமிவ் வாறு நிகழ்த்தப படும்ப
பிரமமே யாஞுவ னென்னு—முறுதி
யழிககுமறி யாமை யலைவுகளை நோய்க
ளொழிககுமிர சாயன மொத்து.

38. ஏகாநத தேசத் திருந்தாசை யின்றிவெளி
போகாது வென்று பொறிகளை—யேகமா
யநதமி லான்மாவை யன்னியமில புநதியஞுய்ச
சிநதிக்க வேண்டுந தெரி.

39 புத்திமான் காணும் பொருளவையு மான்மாவிற்
புத்தியா லொன்றல் புரிவித்தே—சுத்தமாம்
விண்ணென வொன்றாய் விளங்கிடு மான்மாவை
யெண்ணுக வெப்போது மே.

40. உள்ள துணர்ந்தோ னுருவம் வருணமுத
னுள்ள மயல்க ளொருங்கொழித—துள்ளந
திகழ்பரி பூன்ற சிதானந்த தானை
திகழ்ந்திடுவ னுஞ்ந தெரி.

41 அறிவா னறிவோ டறிபடுவ பேத
முறுபரமான் மாவி னுருதே—யறிவின்
புருவாயொன் றுயஃ துறவத னற்றன்
னுருவாலே தாளொளிரு மோரா

42 ஆன்மா வெனுமவ் வரணியி லிவ்வித
மான்மத் தியான வகமதனந—தான்முயன்று
சந்ததஞ் செயதலாற் சார்ஞானத் தீமடமை
யிந்தனமெல லாமெரிகரு மே

43 அருணனு லேயல லகலுதல் போன்முன்
மருவறி வாலம் மடமை—யிரியவே
பொங்குமான் மாபரி பூரண மாகவே
பொங்குமா தித்தனைப் போல்.

44. ஆன்மாவெப போது மடைநதுளதே யானுலுந
தான்மடமை யாலடையா தாயமரு—மான்மடிய
வெய்தப்பெற் றுற்போ லிலகுநதன் கண்டவணி
யெய்தப்பெற் றுற்போல வே

45. பிரமத்திற் சீவன் பிராநதியாற் கட்டை
புருடன்போற் கற்பிதன் பொய்யா—முருவத்தின்
றத்துவம் யாதென்று தானுணரி னவ்வுருவம
வத்துவா காது மதி.

46. தத்துவசொ ரூபானு பூதியாற றுனுதி
யுததம ஞான முடனேயம்—மித்தையா
நானெனதஞ ஞான நசிபபிககுந திகபிரமை
பானுவுத யததெனவே பார

47. நன்று தனேயறிவின ஞானியாம யோகியு
மொன்றுமெலாந தன்னி லுறுவதை—யொன்றுன
தானெல்லா மாயுளதைத தன்ஞானக் கண்ணினுற்
றுன்காண்ப னென்றே தரி

48 ஆன்மாவே யிவ்வுலகெல் லாமாகு மற்பமு
மான்மாவுக் கன்னிய மாயிலலே—யான்மாவாய்க்
காண்டனெல் லாமுங கடாதிகள்மண் ணின்வேறாய்க்
காண்பது முண்டோ கழறு.

49. சீவன்முக் தன்விதவான் றேருவதன் முனறன்னே
மேவு முபாதிகுணம் விட்டுடனே—மேவுவான்
றன்னுருசச் சித்தின்மைத் தான்கீடம வண்டினுருத்
தன்னேயுறல் போலதை தரி.

50. மோகக் கடல்கடநது மூளாசை கோபமுத
லாகு மரக்க ரறக்கொன்று—யோகி
யமைதி யொடுகூடி யான்மாவி னின்பத
தமைநதொளிர்வ னென்றே யறி.

51. அநித்தவெளி யின்பிச்சை யற்றுை யான்மா
தனின்பிற் றிருததி தனேயுற்—றனிசமுந
தன்னொளி யாறகுடந தன்னுள் விளக்கெனத்
தன்னுளே தானொளிர்வன் றுன்.

52 உபாதியுற் றானேனு மொட்டாவின் போலவ்
வுபாதிதரு மங்களோ டொட்டா—னுபாதியிலான்.
முற்றறிவ னேனுமுனி மூடனென வாயுபோற்
பறறற்றுச் சஞசரிப பான்.

53. உபாதிநா சததா லுறுவான முனிவ
னுபாதியில விஷ்ணுவி னுள்ளே—யபேதமே
தோயத்திற் றோயமுந தாவிண்ணி லேவிண்ணுந
தீயிற்றீ யுமபோலத் தேர்.

54. எவ்வடை விற்பிறி தேதுமடை தற்கின்றோ
வெவ்வின்பி னிற்பிறி தின்பின்றோ—வெவ்வறிவு
தன்னிற் பிறிதறிவு தானின்றா மோவது
தன்னைப பிரமமெனச சார்.

55 எதுகாணக காண்டற் கெதுவுமே யின்றோ
வெதுவான பின்சன்ம மின்றோ—வெதுவறிநத
பின்னறியத் தக்க பிறிதோர் பொருளின்றோ
வன்னது தானபிரம மாம்.

56. எதுகுறுககு மேல்கீழா மெங்குநிறை வாகு
மெதுசசசித தின்பிரண் டில்ல—தெதனநதம்
நித்தமா யொன்றாய நிகழ்வதெது வாகுமவ
வத்து பிரம மதி.

57 ஏதழிவில் லாத தெதையன்றென் றன்றென்றே
வேத முடிவு விளக்கிடும்—யாதொன்
றகண்டவின் பாகி யமருமது தானே
திகழும் பிரமந் தெளி.

58 அகண்ட சுகமய வானமாவி லற்ப
சுகத்தை யடுத்தே சுரராய்த்—திகழும்
பிரமாதி யேனோர் பிறங்குவரின் புற்றுத்
தராதர மாகத் தரி.

59 அதனிடத் துள்ள தகிலமுஞ் செய்கை
யதையடுத் துள்ளதே யாகு—மதனாற்
பரவிடு மெல்லாம பரமபொருள் பாலில்
விரவிடு நெய்போல வே.

60 பருமையு நுணமையுற் பத்தி விநாசங்
குறுகலு நீட்சியுங் கூடா—துருவங்
குணங்குல நாமமுங் கொள்ளாம லுள்ள
துணாக பிரமமென் றுற்று.

61 எதனொளியி னொளிரு மேயிரவி யாதி
யெதனை யவையொளிர்க்க வேலா—ததனாலே
யிநதவுல கெலலா மிலகு மதுதானே
யநதப பிரம மறி

62 ஒளிர்த்துலக மெல்லாந்தா னுள்வெளிவி யாபித்
தொளிர்ந்திடு மப்பிரம மோராவா—யொளிரு
நெருப்பினிற் காய்ந்தங்கி நேரொளிரு மந்த
விருப்புண்டை யைப்போல வே.

63. பிரம முலகிற் பிறிதாகு மநதப
பிரமத் தணுவில் பிறிதாய்ப—பிரமததிற்
கன்னிய மேது மவிர்நதா லதுமித்தை
யுன்னுக கானனீ ரொத்து.

64. எதுவெது காணவுங் கேட்கவு மேயு
மதுபிரமத் தன்னிய மாகா—ததுவுமே
தத்துவஞா னத்தினாற் சச்சிதா னநதமா
மத்துவி தப்பிரம மாம்.

65. சருவதது ஞ சார்நததா ஞ சசசிதா னநதப
பிரமத்தை ஞானக்கண பெற்றான்—றரிசிப்பான்
ஞானக்கண் ணில்லாதா னண்ணானே காட்சியொளிர்
பானுவையந தன்போலப் பார்.

66. சிரவண மாதிகளாற் றேசுறு ஞான
வெரியினிற் காய்சசி யெடுக்கச—சருவ
மலமும்போய்ச சீவன் மறுவில்பொன் போனிர்
மலனாகித் தானொளிர வான்.

67. இதயவெளி தோன்றி யிருளையழி ஞான
வுதயரவி யான்மா வொளிரு—நிதமுமே
யெல்லாவற றும்பரவி யெல்லாமுந் தாங்கிநின்
றெல்லா மொளிர்விக்கு மெண்.

பஃறொடைவெண்பா

68. திக்கிடங் காலமுத றேடாம லென்றுமெத்
திக்குமார்ந தேகுளிர்முன் நீர்ப்பதா—யெக்களங்கு
மற்றநித் யானநத வான்மதீர்த் தத்துட்டோய்
வுற்றவ னார்செய்கை யொன்றின்றி—மற்றவன்
யாவு மறிநதோனா யெங்குநிறைந தாரமிர்த
னாவ னெனவே யறி.

முற்றிற்று

ஸ்ரீ

# குருஸ்துதி

---

## அவதாரிகை

ஸ்ரீ ஜகத்குரு சங்கரர் திக்விஜயஞ் செய்யத் தொடங்கி வடதிசைக்கண் விளங்கும் மாஹிஷ்மதி நகரத்து வசிக்கும் காமகாண்டப் பிரவாத்தகரான மண்டனபண்டிதரை வாதத்தில் ஜயிக்க, அவரது பார்யை 'என்னையும் ஜயிக்கினன்றி ஜயம் முற்றுறாது' என்றுரைத்து அவருடன் வாதித்துத் தோற்றுப் பின் காமசாஸ்திரத்தில் வாதிக்க, அதற்கவர் ஒரு மாத காலவரையறை கூறி யோர்மலைக்குகையில் சீடர் காவலில் தம் சரீரத்தை வைத்து, மரித்த அமருக ராசனுடற் புகுந்து அவனது மனைவியரான நூற்றுவருடன் கலந்து காம போக மனுபவித்துக் கொண்டிருக்கையில். குரு கூறிப்போன காலங் கடந்தமையாற் கவலையுற்றுச் சீடரிற் சிலர் பாடக வேடந் தரித்துச்சென் றவ்வரசன் முன்னின் றித்தோத்திரத்தா லேத்தலாயினர்.

நேதிநே தியாதி வாக்கா ணிடேதித்து மூர்த்தா மூர்த்த
மேதுமே தள்ளற் கில்லா வெதைச்சுவ சொரூப மாக
வோதருஞ் சாது வானோ ருள்ளத்திற் கொள்ளு வார்க
ளாதிமெய் யறிவா னந்த வவ்வத்து வன்றோ நீதான் (1)

உத்தியாங் குத்தி னாலே யுமியெனு மைந்து கோசம்
புத்தியாற் பிரித்துப் பின்னர்ப் பொருந்திடு மரிசி போலு
மெத்தினைச் சத்துக் கள்கண் டிதயத்தி லனுப விப்ப
ரத்தமி னித்த சித்த வவ்வத்து வன்றோ நீதான். (2)

பொறிகளாம் பரிக டம்மைப் புலன்களில் விளங்குந் தோட
வறிவெனுங் கசைய டித்தே யகமுகக் கயிற்றா லீர்த்தவ்
வறிவறி யறிஞ ரெத்தி லிணைத் தொன்றாப் பிணித்தி ருப்ப
ரறிபொருட் கதீத மான வவ்வத்து வன்றோ நீதான். (3)

பூக்களி னின்று வேறுய்ப பொருநதிடுஞ சூத்தி ரமபோற்
சாக்கிர மாதி யான சருவததும வேற தான
சாக்கியா ேநாக்கி யாதைச சததுக்க ளகத்த ணைவ
ராக்கமு நீகக மிலலா வவ்வத்து வன்றே நீதான். (4)

கடகமகு டாதி யாவுங கனகமே யாகு மாபோற்
சடசித்தா முலகம் யாவுஞ் சற்றுமே பின்ன மின்றிச
சுடருமவ் வடிவா யென்று சொற்றிடும் வேதம் யாதை
யடிநடு முடிவில் லாத வவ்வதது வன்றே நீதான் (5)

இனனிலித தனுவில் யாறு யிலஙகுவ னேக னேயென்
றனிசமும் வேத வாதி யாயினோர் முயற்சி யோடு
மினிமையா யெடுதது ரைபப ரெத்தத்து வதனை நன்று
யனாததமி லெதாாதத மான வவவதது வன்றே நீதான் (6)

அருமறை வாக்கி னூலே யகததினிற் சிரத்தை யோடு
மருநதவம யாகந தான மாதிநல் லறஙக ளாலே
யருமறை யவர்க ளெதனை யறிநதிட வவாவு கின்று
ருமறைப பொருளாய நின்ற வவ்வதது வன்றே நீதான்.(7)

சாந்திமுத லான வுற்றுச் சநததந தன்னூற் றன்னி
லாயநதெதை யறிஞர் கணடவ வறிவின்ப மெயயா யென்று
மீங்கெலா முடிதமெதா னிாவர் மிகுபவக் கேத நீத்தே
யாழ்நதறி தத்வ மான வவ்வத்து வன்றே நீதான். (8)

இதனைக்கேட டாசார்ய ரவாககுததரவுகொடுத் தனுபபி விட டுடனவ வரசனுடல விட்டுத தம்முடற புககுச சென் றவ வம்மையை வென்று அவவிருவரையுந தமககுளளாககி யிககுவலய முறறும் விளக்க முற்றனா.

குருஸ்துதி ஸம்பூர்ணம்

---

ஸ்ரீ

# அத்தாமலகம்

---

அவதாரிகை

ஸ்ரீ சங்கர ஜகத்குரு மேற்கு திக்கில விஜயஞ் செய்யுங் கால, அங்குள்ள ஸ்ரீவலியென்னுங் கிராமத்து வசிக்கும் பிரபாகரா என்னு மந்தணர் ஆசாரியரது வரவை அறிந்து, தம் பதின்மூன்று வயதுள்ள புத்திரனை யழைத்துச் சென்று குரு சந்நிதியில நமஸ்கரித்து எழுந்து நின்று தநயனையும் நமஸ்கரிப்பித்து, சிறு வயது முதல மூகனுய ஒன்றிலும் பிரவிருத்தியற்று விருப்பு வெறுப்பு மாறுவமான மின்றி யிருக்குமவன் வரலாற்றைச் சொலல, கிடந்தவண்ணமிருந்த பாலனைத் தேசிகா கரங்களாலெடுத்துப் பாாத்துக் களிமீக்கூர இவவாறு வினவலாயினா —

இங்குறு நீயார் பிள்ளாய் யாருடை மைந்த னீதா
னெங்குசெல் கின்று யுன்பே ரென்னநீ யெங்கி ருந்து
மிங்குவந் தனையென் னுள்ள மின்புற விசைப்பா யென்று
சங்கர னவிலப் பாலன் சாற்றிட வாய்தி றந்தான். (1)

அத்தாமலக னுத்தரம் .—

நரனலன் சுரனி யக்க னலல னந்த ணன்மற்
றரசனும் வணிகன் சூத்ர னல்லனற் பிரம சாரி
கிரகியும வான ப்ரத்தன கேடகல் சந்நி யாசி
நிரையினி லாரு மல்லே னிசபோத வடிவ னமே. (2)

சூரியன சகத்தொ ழிற்குச் சொற்றிடு நிமித்தமென்ன
வாருளஞ் சட்சு வாதி யாட்டத்திற் கேது வாவ
னொலா வுபாதி யுமவிட் டாகாயம போலி ருபப
னெரிய னித்த சித்த வுருவனு மவவான் மாநான் (3)

எரியது வெம்மை போல வெவனித்த போத ரூப
னொருவனுயக கம்ப மின்றி யொளிதரு மெவனைச சாரநதே
யறிவிலாக் கரண மிநதி யாதிநந தொழின்மேற் செல்லு
மறிவுறு நித்த சித்த னுயுள வவ்வான் மாநான். (4)

அதததிற் பதிப லித்த வமமுக முகத்தின் வேறோ
வத்துவன் றதுபோற் புத்தி வருசிதா பாச சீவன்
சித்துரு வெவன்வே றுகச் சிறிதுமோா வதது வாகா
னதவய நித்த சித்த னுயுள வவ்வான் மாநான். (5)

அத்தமே யில்லை யாகி லம்முகா பாச மின்று
வத்துவா யுற்ற தேக வதனமே விகற்ப மின்றி
புத்தியற் றிடவே யாவன் பொலிவனு பாச மின்றி
யதிற நித்த சித்த னுயுள வவவான் மாநான். (6)

மனசசட்சு வாதி யோடு மருவிடா திருப்பன் யாவன்
மனசசட்சு வாதி கட்கு மனச்சட்சு வாதி யாவன்
மனசசட்சு வாதி யாலே மருவிடப படாதான் யாவ
னனித்தமி னிதத சித்த னுயுள வவவான் மாநான். (7)

கடசலந தோறுந தோன்றுங கதிரவ னொருவ னேபோ
லுடலுறு முளளந தோறு மொளிரினு நானு வாகச
சுடருவ னொருவன் றனே சுத்தசே தனனு யாவ
னடைதலி னித்த சித்த னுயுள வவ்வான் மாநான். (8)

ஒளியதா மனேகங் கணகட் கொருரவி யொருகா லத்தே
யொளிசெயு முலகத தைபபோ லொருஞான வுருவனயாவ
னொளியதா யனேகம புததிக கொளிர்பபனிவ் வுலகந தன்னை
யளவிலா நித்த சிதத னாயுள வவவான் மாநான். (9)

இரவியா லொளிருங கண்ணே யெதிருறு முருவம பறறு
மிரவியா லொளிரா தின்றா மிதுபோலவ விரவி தானு
மொருவனா லொளியி னாலே யொளிர்பபனோ நேததி ராதி
யருவனாய் நித்த சித்த னாயுள வவவான் மாநான் (10)

சலசலத் தனேகன் போலச சாருவ னேக பானு
சலனமில் சலத்திற் றானே சாருவ னேக னாக
சலமதி யனேகன் போலச் சாரினு மேகன் யாவ
னலைதலி னித்த சித்த னாயுள வவவான் மாநான். (11)

மூடன்றன் விழியி னைககார் மூடிட வதால ருக்கன்
மூடுபட் டொளியற் றானா முன்னுதல் போல யாவன்
மூடனின் பார்வை யாலே முற்றுமே பெத்தன் போல்வ
னாடலி னித்த சித்த னாயுள வவவான் மாநான் (12)

அகிலவத் துக்க டம்மி லனுசூத னேக னாகி
யகிலவத் துக்க டம்மி லசஙகனா யிருபபன் யாவன்
ககனநேர் நித்த சுத்த களங்கமி லுருவன் யாவ
னகமிலா நிதத சிதத னாயுள வவ்வான் மாநான். (13)

பலவித வுபாதி யாலே பலவிதம படிகந தோன்றும்
பலவித புத்தி யாலே பலவித முனக்கு மாகுஞ
சலமதி னிலவி னாட்டஞ சான்றாகப் பூன்ற னேயச்
சலமுறு புத்தி யாலே சஞ்சல நினககு மாமே. (14)

அத்தத்தி னெல்லி போல வான்மாவைக் காட்ட லாலே
தத்தா மலகத் தோத்ர மாகும்பேர் பெற்ற தன்றி
யத்தா மலக னென்றவ வறிவினிற் பெரிய பால
னித்தரை யாவ ராலு மேத்திடப் பட்டா னம்மா (15)

இதனைக்கேட் டாசாரியத்தா றம்மை மறந்து நிற்கும் பிதாவை யாசாரியர் நோக்கி, 'இவன் முற்றவக்குறையா லுமக்கு மகனை துமது பாக்கியமே. இதத்தில இவனு லுமக்கோர் பிரயோசனமு மிராது. நம்பாலிருக்கட்டும்' என்றுரைத் தவரை யனுப்பிவிட்டுத் தம்முடன் பாலனைக் கூட்டிச் சென்றனா. பின்னா, குருவைப் பார்த்து, 'இச்சிறு வன் சிரவணாதி சாதனமின்றி யிப் பிரஹ்மநிஷ்டை யடையக் காரணம் யா'தென்று சீடா வினவ, குரு, 'இவன் தாய முன் யமுனாதீரத்திற் றவஞ்செய்யும் சாவைசுவரிய சம்பந்ந சாது வான சித்தயோகியிடம் தன்னிருவயதுள்ள குழந்தையை விட்டு மற்ற ஸ்திரீகளுடன் ஸ்நானஞ் செய்கையில சிசு மெல்ல நடந்துபோ யந்நதியில வீழ்ந்திறக்க அதற்காற்றாது துக்கிக்கு மவரைத் தேற்றக் கருணை மிகுதியா லச்சாது தம் முடலைவிட் டச் சிசுவுடலிற்புக வதனாலேயே இப்பெரும்பேறு பெற்றனன்' என்று புகன்றனா.

அத்தாமலகம ஸம்பூர்ணம்



ஸ்ரீ
பகவத்பூஜ்யபாத சங்கரஜகத்குரு அருளிய

# விவேகசூடாமணி

## அவதாரிகை

உலகத்தில் எல்லா ஜீவர்களும் துக்கமென்பதின்றி எப்போதும் சுகமாயிருக்கவேண்டுமென, தன் சுபாவமல்லாத ரோகாதிகளை நீக்கி எப்போதும்போற் சுகமாயிருக்கவேண்டு மென்பது போலக் கோருதலானும், யாவர்க்கும் தன்னிடத்திலேயே அத்தியந்தம் பிரீதியிருப்பதானும், பிரியம் சுகத்திலன்றி யுண்டாகாததாலும், நித்திரையில் ஒன்று மின்றியே சுகமாயிருக்கு மனுபவத்தாலும் சுகமென்பது தானாகவே யிருக்க, தன்னையறியாத அஞ்ஞானத்தாலேயே அபார சம்சாரத்தி லுழன்று, சுகந்தரும் மார்க்கம் விட்டு, இகபரபோக மடைதலே சுகவழி யென்ப பிரவிருத்திக்கின்றனர். ஆனால் துக்கமற்ற சுகங்கிடைக்கிறதில்லை. இதன் நேர்வழி காட்டவே சாக்ஷாத் ஸ்ரீ சங்கரர் சங்கர வேஷம் பூண்டு இச் சுகத்தின் பெருமையைக் கீர்த்திக்கும் வேதாந்தத்தின் பிரஸ்தானத்திரயத்திற்கும் பாஷ்யஞ் செய்து வழிகாட்டி நடந்துங் காட்டினர். அவற்றைப் பார்த்தலி லசமர்த்தராய் அதிதீவிர சுகேச்சுக்க

ளான முமுக்ஷுக்களுக்கவை பயன்படாமையின், அவற்றி னந்தரங்கத்தை இந்த விவேகசூடாமணிக் கிரந்தத்தால் வெளிப்படுத்தி முமுக்ஷுக்களுக்கு வேண்டிய விஷயங்களை விஸ்தாரமாய்க் கூறி நேர்மார்க்கங் காட்டியிருக்கின்றனர்.

இதில், மனுஷ்ய ஜன்மங் கிடைப்பது துர்லப மென் றும், அதனால் தன் சுபாவ மோக்ஷானந்த மடையப் பிர யத்தனஞ் செய்யவேண்டு மென்றும், ஞானத்தாலேயே மோக்ஷமென்றும், ஞானம் விசாரத்தாலேயே வருமென் றும், அதற்குக் குருவை யடையவேண்டு மென்று குரு லக்ஷணம், சிஷ்யலக்ஷணம், குருசேவையையுங் கூறிப் பின்னும் சுகமடையத் தன் பிரயத்தனமே முக்கியமென் றும், வாங்மாத்திர ஞானத்தாற் சுகங் கிடையாதென்றும், சிரவணாதி விசாரமே மோக்ஷசாதனமென்று மாரம்பித்து, சரீரத் திரயமும் அனாத்மா, அசத்தியம், 'அஹம்' எனும் ஆத்மா அவைக்கு விலக்ஷணம். அனாத்மாவில் ஆத்மபுத்தி பந்தம், அஞ்ஞானத்தால் வந்தது, ஞானத்தால் நாசமாம் என்று சிரவணத்தையும்; நானார் என அகத்திற் செய்யும் சூக்ஷ்மவிசாரத்தால் அச் சரீரத்திரயமான பஞ்ச கோசங்களையும் நானன்றெனத் தள்ளி இவைகட்கு விலக்ஷணமாய் ஏகமாய், ஹிருதயத்தில் 'அஹம்' என் றிருக்கும் 'த்வம்' பதார்த்தமான ஆத்மாவை, முஞ்சப் புல்லினுள் ளாணியைப் போலப் பிரித்துக்காணும் மன னத்தையும்; 'தத்' பத உபாதியான நாமரூபப் பிரபஞ் சம் பிரஹ்மமாத்ர மென அவ்வுபாதிநீக்கத்தையும்; 'தத்' பதார்த்தத்தையும்; அவ்விரு பதார்த்தங்களான ஆத்ம பர ஐக்கியத்தைத் தெரிவிக்கும் "தத்துவமஸி" மஹாவாக்கிய உபதேசத்தையும்; இந்த 'அஹம் பிரஹ்ம'மா யிருக்கவேண்டு மென்பதையும்; அங்ஙன மிருக்கினும் பூர்வவாசனைகள் அதிதிடமா யுதித்துத் தடை

புறத்தில் பிரஹ்மப பிரபஞ்சங்கட்கும் சிறிதும் பேதம தெரியவொட்டாமல மறைக்கின்றது இதுவே சமசார காரணம. ஆத்மசந்நிதியி லடுததிருக்கும் லிங்கதேகத் தோடு கூடிய சிதாபாசனுகிய ஜீவனே வியாவகாரிகன். இநத ஜீவத்வம ஆரோபத்தால சாக்ஷியிற் பிரகாசிக கின்றது. ஆவரணம நஷ்டமாயின பேதம தெரிகிறது, ஆரோபம இல்லாமற போகிறது. அஙஙனமே, பிரஹ்மப பிரபஞசபேதம தெரியவொட்டாது மறைத்துளள ஆவரணவசததாலேயே பிரஹ்மம நானுரூபமாய்ப பிர காசிக்கின்றது ஆவரணம் நஷ்டமானுல அவ்விரண்டிற கும பேதம தெரிகிறது; பிரபஞசவிகாரஙக ளவையும பிரஹ்மததி லிருக்கிறதில்லை.

அஸ்தி, பாதி, பிரியம, நாமம், ரூபம என்னும் ஐநது அமசஙகளில சச்சிதானந்தமான முநதின மூன்றும பிரஹ்மரூபம; நாமரூபஙகள் பிரபஞசரூபம. சசசிதானந தங்கள் ஆகாசாதி பஞச பூதங்களிலும, தேவ, திரியக், மனுஷ்யர்களிலும் அபின்னமாயிருக்கின்றன. நாமரூபங் களோ பின்னமா யிருக்கின்றன ஆதலால், நாமரூபங களை யுபேக்ஷித்து ஸச்சிதானநதததற்பரனுய், ஹிருதயத திலோ வெளியிலோ எப்போதும சமாதி செய்ய வேண்டும.

ஸவிகற்பம், நிர்விகற்பம என ஹிருதயத்திற் செய் யும சமாதி இரண்டுவிதம. ஸவிகற்ப சமாதியும திருசி யானுவிததம, சப்தானுவிததம் எனப பின்னு மிருவகை. காமாதி திருசியசித்தவிருத்திகட்குச சாக்ஷியாய்த் தன் னைச சிநதிப்பது ஆநதரதிருசியானுவித்த ஸவிகறபசமாதி. 'நான் அசஙக சொப்பிரகாச ஸசசிதானநத அத்வைத ஸவரூபன்' என்றறிவது ஆநதரசபதானுவித்த ஸவிகறப சமாதி. இவற்றுலுண்டாகும சுவானுபவரசாவேசததால

திருசியம சபதம் இரண்டையும் விட்டு நிவாதஸ்தலதீபம் போல நிச்சலமா யிருபபது ஆந்தரநிர்விகற்பசமாதி. ஹிருதயத்திற்போலவே வெளியிலும் திருசியவஸ்துக் களின் நாமரூபங்களை யுபேக்ஷித்து ஸத்ரூபத்தைப் பாரப் பது பாஹயதிருசியானுவிதத ஸவிகறபசமாதி அச் சச்சி தானந்த வஸ்துவையே அகண்டைகரஸபிரஹமம் என விடாதறிவது பாஹயசபதானுவித்த ஸவிகற்பசமாதி. இவ் விரண்ட னனுபவத்தால் நிஸதரஙக சமுத்திரம் போல் அகண்டமாய் நிசசலமா யிருப்பது பாஹய நிர்விகற்ப சமாதி. இந்த ஷட்சமாதிகளாலும நிரநதரம் காலநதளள வேண்டும். இவற்றால் தேகாபிமானம் நீஙகி ஸதா பர மாதமாவிலேயே ஸ்திதிசெய்யும் மனம எங்கெங்கு செல் லுமோ அஙகெலலாம் சமாதியே இந நிரநதர சமாதிப் பழககத்தால் அப் பராவரமான பரமாத்மாவை சாக்ஷாத் கரித்தமாத்திரத்தில், ஹிருதயககிரநதி பேதிக்கப்படும், சகல சம்சயஙகளும் நஷ்டமாம்; கர்மஙகள நாசமுறும்.

அவச்சின்னன், சிதாபாசன(வியாவகாரிகன்), ஸவபந கல்பிதன் என்னும மூவிதஜீவரில் அவசசின்னன் பார மார்த்திகன். இவனும கற்பிதனே; அவச்சேத்தியமான சொரூபமே வாஸதவம. ஆரோபததால் இவனில் ஜீவத் வததைக் கற்பிப்பதன்றி இவன் ஸவபாவததில் பிரஹ மமே இந்தப பாரமாரத்திகஜீவனுக்கே பூர்ண பிரஹ மததோடு ஏகத்வம் 'தத்துவமஸி' யாதி மகாவாக்கியங் களாற் சொலலப்படுகிறதன்றி இதரஜீவாக் கல்ல. பிரஹ மததில் அநாதிகற்பிதமான ஆவரண விக்ஷேபாத்மிகை யான மாயை, அவ் வகண்டபிரஹமத்தை மறைத்து ஜகத்து ஜீவாகளைக் கற்பிக்கின்றது. புததியிலிருக்கும் சிதாபாச னை கற்பிதஜீவனே, கர்த்தா, போக்தா. பூதபௌதிகப் பிரபஞ்சமனைத்தும் போக்கிய ரூபம. அநாதிமுதல்

மோக்ஷம்வரை வியவகாரத்திருத்தலால், இந்த ஜீவஜக மிரண்டும் வியாவகாரிகம். இவ் வியாவகாரிகனிலிருக்கும் ஆவரணவிக்ஷேபரூபநித்திராசக்தி இவனை மறைத்து, முன் பார்த்ததும நூதனமுமான ஜீவஜகத்தை சொப்பனத்திற் கற்பிக்கின்றது. பிரதீதிகால மாத்திர மிருத்தலால் சொப்பனத்தினின்று முணர்ந்தவாக்குப பின் சொப்பனமின்மையால் பிராதிபாஸிக ஜீவஜகமிரண்டும் பிராதிபாஸிக மாம. பிராதிபாஸிகஸவப்நததைப் பிராதிபாஸிகன் சத்தியமாயும் வியாவகாரிகன் அசத்தியமாயும, வியாவகாரிக ஜகத்தை வியாவகாரிகன் மெய்யாயும் பாரமார்த்திகன் பொய்யாயு மறிகிறான். பாரமார்த்திகனுக்குப் பிரஹ்மத்தோடுள்ள ஏகத்வம் பாரமார்த்திகமே. அவ் வேகத்வத்தை யறிந் தொன்றையும் பார்ப்பதில்லை. பார்க்கின் மிதைதயே.

ஜலதர்மமான மாதுர்யம், திரவத்துவம், சைத்தியம் இவை அலையிலும அதிலுள்ள நுரையிலு மிருப்பதுபோல ஆத்மாவின் சச்சிதானந்த தர்மங்கள் தன்னிற் கற்பித சம்பந்தத்தால் வியாவகாரிகனிலும அவன் மூலமாய்ப பிராதிபாஸிகனிலும் கலந்திருக்கின்றன. நுரை சைத்தியாதி அதன் தாமங்கள அலையிலும், அலை யதன் திரவத்துவாதி தர்மங்கள் ஜலத்திலும் லயித்து முன்போல் சமுத்திரமாத்திரமே யிருப்பதுபோல, பிராதிபாஸிகன் அவனது தர்மங்கள் வியாவகாரிகனிலும், வியாவகாரிகன் அவனது தர்மங்கள் பாரமார்த்திகனிலும் லயித்துப பூர்வம்போல் சச்சிதானந்த பிரஹ்மமாத்திரமே பிரகாசிக்கின்றது.

திருக்குதிருசியவிவேகம் சம்பூர்ணம்

ஓம தத்ஸத் பிரஹ்மார்ப்பணமஸ்து.



# அருண்மொழித் தொகுப்பு



## நானார்?

சகல ஜீவர்களும் துக்கமென்ப தின்றி எப்போதும் சுகமாயிருக்க விரும்புவதாலும், யாவருக்கும் தன்னிடத் திலேயே பரம பிரிய மிருப்பதாலும், பிரியத்திற்கு சுகமே காரண மாதலாலும், மனமற்ற நித்திரையில் தின மனுபவிக்கும் தன் சுபாவமான அச் சுகத்தை யடையத் தன்னைத் தா னறிதல் வேண்டும் அதற்கு நானார்? என்னும் ஞான விசாரமே முக்கிய சாதனம்

நானார்? ஸப்த தாதுக்களா லாகிய ஸ்தூலதேகம் நானன்று, சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தமென்னும் பஞ்ச விஷயங்களையும் தனித்தனியே அறிகின்ற சுரோத்திரம், துவக்கு, சக்ஷுஸ், ஜிஹ்வை, கிராண மென்கிற ஞானேந்திரியங்க ளைந்தும் நானன்று வசனம், கமனம், தானம், மலவிசர்ஜனம், ஆனந்தித்தல் என்னும் ஐந்து தொழில்களையும் செய்கின்ற வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்னும் கன்மேந்திரியங்களைந்தும் நானன்று. சுவாஸாதி ஐந்தொழில்களையும் செய்கின்ற பிராணாதி பஞ்ச வாயுக்களும் நானன்று. நினைக்கின்ற மனமும் நானன்று. சர்வ விஷயங்களும் சர்வ தொழில்களு மற்று, விஷய வாசனைகளுடன் மாத்திரம் பொருந்தியிருக்கும் அஞ்ஞானமும் நானன்று. மேற்சொல்லிய யாவும் நானல்ல, நானல்ல வென்று நேதி செய்து தனித்து நிற்கும் அறிவே நான். அறிவின் சொரூபம் சச்சிதானந்தம்.

சர்வ அறிவிற்கும் சர்வ தொழிற்குங் காரண மாகிய மன மடங்கினால் ஜகதிருஷ்டி நீங்கும். கற்பித ஸர்ப்ப ஞானம் போனாலொழிய அதிஷ்டான ரஜ்ஜு ஞானம் உண்டாகாததுபோல, கற்பிதமான ஜகதிருஷ்டி நீங்கினாலொழிய அதிஷ்டான சொரூபதரிசன முண்டாகாது.

மனமென்பது ஆத்மசொரூபத்தி லுள்ள ஓர் அதிசய சக்தி. அது சகல நினைவுகளையும் தோற்றுவிக்கின்றது. நினைவுகளையெல்லாம் நீக்கிப் பார்க்கின்றபோது, தனியாய் மனமென்றோர் பொருளில்லை; ஆகையால் நினைவே மனதின் சொரூபம். நினைவுகளைத் தவிர்த்து ஜகமென்றோர் பொருள் அன்னியமா யில்லை. தூக்கத்தில் நினைவுகளில்லை, ஜகமுமில்லை; ஜாக்ர சொப்பனங்களில் நினைவுகளுள, ஜகமும் உண்டு. சிலந்திப்பூச்சி எப்படித் தன்னிடமிருந்து வெளியில் நூலை நூற்று மறுபடியும் தன்னுள் இழுத்துக் கொள்ளுகிறதோ அப்படியே மனமும் தன்னிடத்திலிருந்து ஜகத்தைத் தோற்றுவித்து மறுபடியும் தன்னிடமே ஒடுக்கிக்கொள்ளுகிறது. மனம் ஆத்மசொரூபத்தினின்று வெளிப்படும்போது ஜகம் தோன்றும். ஆகையால் ஜகம் தோன்றும்போது சொரூபம் தோன்றாது; சொரூபம் தோன்றும் (பிரகாசிக்கும்) போது ஜகம் தோன்றாது. மனதின் சொரூபத்தை விசாரித்துக் கொண்டேபோனால் 'தானே' மனமாய் முடியும். 'தான்' என்பது ஆத்ம சொரூபமே. மனம் எப்போதும் ஒரு ஸ்தூலத்தை யனுசரித்தே நிற்கும்; தனியாய் நில்லாது. மனமே சூக்ஷ்மசரீர மென்றும் ஜீவனென்றும் சொல்லப் படுகிறது.

இந்தத் தேகத்தில் நான் என்று கிளம்புவ தெதுவோ அதுவே மனமாம். நானென்கிற நினைவு தேகத்தில் முதலில் எந்தவிடத்திற் றோன்றுகின்றதென்று விசாரித்தால்

ஹ்ருதயத்திலென்று தெரியவரும். அதுவே மனதின் பிறப்பிடம். நான், நான் என்று கருதிக்கொண்டிருந் தாலுங்கூட அவ்விடத்திற் கொண்டுபோய் விட்டுவிடும். மனத்தில் தோன்றும் நினைவுக ளெல்லாவற்றிற்கும் நானென்னும் நினைவே முதல் நினைவு இது எழுந்தபிறகே ஏனைய நினைவுகள் எழுகின்றன. தன்மை தோன்றிய பிறகே முன்னிலை படர்க்கைகள் தோன்றுகின்றன; தன்மையின்றி முன்னிலை படர்க்கைக ளிரா.

நானார் எனனும் விசாரணையினாலேயே மனமடங்கும். நானார் என்னும் நினைவு மற்ற நினைவுகளையெல்லா மழித்துப் பிணஞ்சுடு தடிபோல் முடிவில் தானுமழியும். பிற வெண்ணங்க ளெழுந்தா லவற்றைப் பூர்த்திபண்ணு வதற்கு எத்தனியாமல் அவை யாருக் குண்டாயின? என்று விசாரிக்கவேண்டும். எத்தனை எண்ணங்க ளெழினுமென்ன? ஜாக்கிரதையாய் ஒவ்வோரெண்ணமும் கிளம்பும்போதே இது யாருக் குண்டாயிற்று? என்று விசாரித்தால் எனக்கென்று தோன்றும். நானார்? என்று விசாரித்தால் மனம் தன் பிறப்பிடத்திற்குத் திரும்பி விடும்; எழுந்த வெண்ணமு மடங்கிவிடும். இப்படிப் பழகப் பழக மனத்திற்குத் தன் பிறப்பிடத்திற் றங்கி நிற்கும் சக்தி அதிகரிக்கின்றது. சூக்ஷ்மமான மனம், மூளை இந்திரியங்கள் வாயிலாய் வெளிப்படும்போது ஸ்தூலமான நாமரூபங்கள் தோன்றுகின்றன; ஹ்ருதயத் தில் தங்கும்போது நாமரூபங்கள் மறைகின்றன. மனத்தை வெளிவிடாமல் ஹ்ருதயத்தில் வைத்துக் கொண்டிருப்பதற்குத்தான் 'அகமுகம்' அல்லது 'அந்தர் முகம்' என்று பெயர். ஹ்ருதயத்திலிருந்து வெளிவிடு வதற்குத்தான் 'பகிர்முக' மென்று பெயர். இவ்விதமாக மனம் ஹ்ருதயத்திற் றங்கவே, எல்லா நினைவுகளுக்கும்

மூலமான நான் என்பது போய் எப்பொழுதுமுள்ள தான் மாத்திரம் விளங்கும் நான் எனனும் நினைவு கிஞ்சித்து மில்லா விடமே சொரூப மாகும் அதுவே 'மௌன' மெனப்படும் இவ்வாறு சும்மாவிருப்பதற்குத்தான் 'ஞானதிருஷ்டி' யென்று பெயர் சும்மா விருப்பதாவது மனத்தை ஆன்மசொரூபத்தில லயிக்கச் செய்வதே அன்றி, பிறாகருத்தறிதல, முக்காலமுணாதல், தூர தேசத்தில நடப்பன வறிதல ஆகிய இவை ஞானதிருஷ்டி யாகமாட்டா

யதார்த்தமாயுள்ளது ஆத்மசொரூப மொன்றே. ஜக ஜீவ ஈசவரர்கள, சிப்பியில் வெள்ளிபோ லதிற் கற்பனை கள. இவைமூன்று மேககாலத்திற் றோன்றி ஏககாலத்தில் மறைகின்றன. சொரூபமே ஜகம, சொரூபமே நான்; சொரூபமே ஈச்வரன்; எல்லாம சிவசொரூபமாம்

மனம் அடங்குவதற்கு விசாரணையைத் தவிர வேறு தகுந்த உபாயங்களில்லை மற்ற உபாயங்களினு லடக்கினுல மனம அடங்கினுற்போலிருந்து மறுபடியும கிளம்பிவிடும் பிராணுயாமத்தாலும் மனமடங்கும; ஆனுல பிராண னடங்கியிருக்கும்வரையில் மனமு மடங்கியிருந்து, பிராணன் வெளிப்படும்போது தானும வெளிப்பட்டு வாசனைவயத்தா யலையும் மனத்திற்கும் பிராணனுக்கும பிறப்பிட மொன்றே நினைவே மனத்தின் சொரூபம். நானென்னும் நினைவே மனத்தின் முதல் நினைவு, அதுவே யகங்காரம. அகங்கார மெங்கிருந்து உற்பத்தியோ, அங்கிருந்துதான் மூச்சும கிளம்புகின்றது. ஆகையால் மன மடங்குமபோது பிராணனும், பிராண னடங்கும் போது மனமு மடங்கும. ஆனுல் சுழுத்தியில் மனமடங்கி யிருந்தபோதிலும் பிராண னடங்கவில்லை தேகத்தின் பாதுகாப்பின் நிமித்தமும், தேகமானது மரித்து விட்

டதோ வென்று பிறர் ஐயுறு வண்ணமும இவ்வாறு ஈசவர நியதியால ஏற்பட்டிருககிறது ஜாககிரத்திலும் சமாதியிலும மன மடங்குகிறபோது பிராண னடங்குகிறது பிராணன் மனத்தின் ஸதூலரூப மெனபபடும் மரண காலம வரையில் மனம பிராணனை உடலில் வைததுக் கொண்டிருந்து, உடல மரிககுங் காலததில் அதனைக் கவர்ந்து கொண்டு போகின்றது. ஆகையால பிராணுயாமம மனத்தையடக்க சகாயமாகுமே யனறி மனோ நாசஞ் செய்யாது.

பிராணுயாமம போலவே மூாத்திததியானம, மந்திர ஜபம, ஆகாரநியம மென்பவைகளும மனத்தை யடக்கும் சகாயங்களே மூர்ததிததியானததாலும், மநதிரஜபததாலும மனம ஏகாககிரததை யடைகிறது சதா சலித்துக் கொண்டிருக்கும் யானையின் துதிக்கையில் ஒரு சங்கிலியைக் கொடுததால் அவயானை எபபடி வேறொன்றையும் பற்றும லதையே பற்றிககொணடு செலலுமோ, அப்படியே சதா சலித்துக்கொண்டிருக்கும மனமும, அதனை ஏதோ ஒரு நாமம அல்லது ரூபத்திற பழககினல் அதையே பற்றிக்கொண்டிருககும. மனம அளவிறநத நினைவுகளாய் விரிகின்றபடியால ஒவ்வொரு நினைவும அதி பலவீனமாகப் போகின்றது. நினைவுக ளடஙக வடங்க ஏகாக்கிரத்தன்மை யடைநது, அதனற் பலத்தை யடைநத மனத்திற்கு ஆத்ம விசாரம் சுலபமாய் சித்திக்கும். எல்லா நியமங்களிலுஞ் சிறந்த மித ஸாத்விக ஆகாரநியமத்தால் மனததின் ஸதவ குணம் விருத்தியாகி, ஆத்மவிசாரத்திற்கு சகாய முண்டாகிறது.

தொன்றுதொட்டு வருகின்ற விஷயவாசனைகள் அளவற்றனவாய்க் கடலலைகள்போற் ரேன்றினும அவையாவும் சொரூபத்யானம் கிளம்பக் கிளமப அழிந்துவிடும. அத்

தன்னை வாசனைகளு மொடுங்கி, சொரூபமாத்திரமா யிருக்க முடியுமா வென்னும் சந்தேகநினைவுக்கு மிடங்கொடாமல், சொரூபத்யானத்தை விடாப்பிடியாய்ப் பிடிக்கவேண்டும். ஒருவன் எவ்வளவு பாபியாயிருந்தாலும், 'நான் பாபியா யிருக்கிறேனே! எப்படிக் கடைத்தேறப்போகிறே' னென்றேங்கி யழுதுகொண்டிராமல், தான் பாபி என்னு மெண்ணத்தையு மறவே யொழித்து சொரூபத்யானத்தி லூக்கமுள்ளவனாக விருந்தால் அவன் நிச்சயமா யுருப் படுவான்.

மனத்தின்கண் எதுவரையில் விஷயவாசனைக ளிருக் கின்றனவோ, அதுவரையில் நானாரென்னும் விசாரணையும் வேண்டும். நினைவுகள் தோன்றத் தோன்ற அப்போதைக் கப்போதே அவைகளை யெல்லாம் உற்பத்திஸ்தானத் திலேயே விசாரணையால் நசிப்பிக்கவேண்டும். அன்னி யத்தை நாடாதிருத்தல் வைராக்கியம் அல்லது நிராசை; தன்னை விடாதிருத்தல் ஞானம் உண்மையி லிரண்டு மொன்றே முத்துக்குளிப்போர் தம் மிடையிற் கல்லைக் கட்டிக்கொண்டு மூழ்கிக் கடலடியிற் கிடக்கும் முத்தை எப்படி எடுக்கிறார்களோ, அப்படியே ஒவ்வொருவனும் வைராக்கியத்துடன் தன்னுள் ளாழ்ந்து மூழ்கி ஆத்ம முத்தை யடையலாம். ஒருவன் தான் சொரூபத்தை யடையும் வரையில் நிரந்தர சொரூபஸ்மரணையைக் கைப் பற்றுவானாயின் அது வொன்றே போதும். கோட்டைக் குள் எதிரிக ளுள்ளவரையில் அதிலிருந்து வெளியே வந்துகொண்டேயிருப்பார்கள். வரவர அவர்களை யெல்லாம் வெட்டிக்கொண்டேயிருந்தால் கோட்டை கைவசப்படும்.

கடவுளும் குருவும் உண்மையில் வேறல்லர். புலி வாயிற்பட்டது எவ்வாறு திரும்பாதோ, அவ்வாறே

குருவி னருட்பார்வையிற் பட்டவர்கள் அவரால ரக்ஷிக் கப்படுவரே யன்றி யொருக்காலும கைவிடப்படார்; எனினும, குரு காட்டிய வழிபபடி தவறாது நடகக வேண்டும்.

ஆன்மசிநதனையைத் தவிர வேறு சிநதனை கிளம்புவ தற்குச சற்று மிடஙகொடாமல ஆதமநிஷ்டாபரனா யிருப் பதே தன்னை ஈசனுக் களிபபதாம ஈசன்பேரில எவ்வ ளவு பாரத்தைப் போட்டாலும, அவ்வளவையும அவர் வகித்துக்கொளளுகிறார். சகல காரியஙகளையும் ஒரு பர மேசவர சகதி நடத்திக்கொண்டிருககிறபடியால, நாமு மதற் கடங்கியிராமல, இபபடிசசெய்யவேணடும, அபப டிச் செய்யவேண்டு மென்று ஸதா சிநதிப்பதேன? புகை வணடி சகல பாரங்களையும தாஙகிககொண்டு போவது தெரிநதிருநதும, அதி லேறிககொண்டு போகும நாம நம முடைய சிறிய மூட்டையையு மதிற் போட்டுவிட்டு சுகமா யிராமல், அதை நமது தலையிற் றாஙகிககொண்டு ஏன் கஷ் டப்படவேணடும?

சுகமென்பது ஆத்மாவின் சொரூபமே; சுகமும் ஆத்ம சொரூபமும வேறனறு. ஆதமசுகம ஒனறே யுள்ளது; அதுவே ஸத்யம. பிரபஞ்சப பொருள் ஒன்றி லாவது சுக மென்பது கிடையாது அவைகளிலிருந்து சுகம கிடைப்பதாக நாம நமது அவிவேகத்தால் நினைக கின்றோம. மனம வெளியில வரும்போது துக்கததை யனுபவிக்கிறது. உண்மையில் நமது எண்ணங்கள பூாத்தி யாகுமபோதெல்லாம் அது தன்னுடைய யதாஸதானத் திறகுத் திருமபி ஆத்மசுகததையே யனுபவிககிறது. அப் படியே தூக்கம, சமாதி, மூாச்சை காலஙகளிலும, இச்சிதத பொருள கிடைககிற போதும, வெறுத்த பொருளுககுக் கேடுண்டாகும போதும மனம அநதர்முகமாகி ஆதம

சுகத்தையே யனுபவிக்கிறது. இப்படி மனம் ஆத்மாவை விட்டு வெளியே போவதும், உள்ளே திரும்புவதுமாக ஓய்வின்றி யலைகிறது. மரத்தடியில் நிழல் சுகமாயிருக்கிறது. வெளியில் சூரியவெப்பம் கொடுமையா யிருக்கிறது வெளியி லலையு மொருவன் நிழலிற் சென்று குளிர்ச்சி யடைகிறான். சிறிது நேரத்திற்குப் பின் வெளிக்கிளம்பி வெப்பத்தின் கொடுமைக் காற்றாது, மறுபடியும் மரத்தடிக்கு வருகிறான். இவ்வாறு நிழலினின்று வெளியிற் போவதும், வெயிலினின்று நிழலிற் செல்வதுமாயிருக்கிறான். இப்படிச் செய்கிறவன் அவிவேகி. ஆனால் விவேகியோ நிழலைவிட்டு நீங்கான். அப்படி, ஞானியின் மனமும் பிரஹ்மத்தை விட்டு நீங்குவதில்லை. ஆனால் அஞ்ஞானியின் மனமோ பிரபஞ்சத்தி லுழன்று துக்கப்படுவதும், சிறிது நேரம் பிரஹ்மத்திற்குத் திரும்பி சுகமடைவதுமாயிருக்கிறது. ஜகமென்பது நினைவே. ஜகம் மறையும்போது அதாவது நினைவற்றபோது மனம் ஆனந்தத்தை யனுபவிக்கின்றது; ஜகம் தோன்றும்போது அது துக்கத்தை யனுபவிக்கின்றது.

இச்சா ஸங்கல்ப யத்நமின்றி யெழுந்த ஆதித்தன சன்னிதி மாத்திரத்தில் காந்தக்கல் அக்கினியைக் கக்குவதும், தாமரை மலர்வதும், நீர் வற்றுவதும், உலகோர் தத்தங் காரியங்களிற் பிரவிருத்தித்து இயற்றி யடங்குவதும், காந்தத்தின்முன் ஊசி சேஷ்டிப்பதும் போல ஸங்கல்ப ரகிதராயிருக்கும் ஈசன சன்னிதான விசேஷ மாத்திரத்தால நடக்கும் முத்தொழில் அல்லது பஞ்ச கிருத்தியங்கட் குட்பட்ட ஜீவர்கள் தத்தம் கர்மானுசாரம் சேஷ்டித்த தடங்குகின்றனர். அன்றி, அவர் ஸங்கல்ப ஸஹித ரல்லர். ஒரு கருமமு மவரை யொட்டாது. அது லோககருமங்கள் சூரியனை யொட்டாததும், ஏனைய சதுர்

பூதங்களின் குணகுணங்கள் வியாபகமான ஆகாயத்தை யொட்டாததும போலும.

எந நூலிலும் முகதி யடைவதற்கு மனத்தை யடக்க வேண்டுமென்று சொல்லப்பட்டுள்ளபடியால் மனோ நிக்ர கமே நூலகளின் முடிவான கருதது என்றறிநதுகொண்ட பினபு நூலகளை யளவினறிப படிப்பதாற் பயனிலலை மனத்தை யடககுவதற்குத் தன்னை யாரென்று விசாரிக்க வேண்டுமே யலலாமல எபபடி நூல்களில விசாரிபபது? தன்னைத் தன்னுடைய ஞானககண்ணாறறுனே யறியவேண் டும ராமன் தன்னை ராமனென்றறியக கண்ணாடி வேண் டுமா? 'தான' பஞசகோசஙகளுககுள் ளிருப்பது; நூல் களோ அவறறிற்கு வெளியிலிருபபவை. ஆகையால் பஞ்ச கோசஙகளையும நீககி விசாரிககவேணடிய தன்னை நூல் களில விசாரிபபது வீணே. பநதத்திலிருக்கும் தான் யாரென்று விசாரித்து, தன் யதார்த்த சொரூபத்தைத் தெரிநதுகொளவதே முகதி சதாகாலமும மனத்தை ஆத்மாவில வைத்திருப்பதற்குத்தான் 'ஆதமவிசார' மெனறு பெயர், தியானமோ தன்னை ஸசசிதானந்த பிரஹமமாக பாவிபபது. கற்றவை யனைத்தையும் ஒரு காலததில மறககவேண்டிவரும்.

குபபையைக் கூட்டித் தளளவேண்டிய ஒருவன் அதை யாராய்வதா லெபபடிப் பயனிலலையோ அபபடியே தன்னையறியவேண்டிய ஒருவன் தன்னை மறைததுககொண் டிருக்கும் தததுவஙக ளனைததையும சேர்ததுத் தளளி விடாமல் அவை இத்தனை யென்று கணககிடுவதாலும், அவற்றின் குணங்களை ஆராய்வதாலும் பயனிலலை. பிரபஞ் சத்தை ஒரு சொபபனததைபபோ லெண்ணிக்கொளள வேண்டும.

சுகத்தையே யனுபவிக்கிறது. இப்படி மனம் ஆத்மாவை விட்டு வெளியே போவதும், உள்ளே திரும்புவதுமாக ஓய்வின்றி யலைகிறது. மரத்தடியில நிழல் சுகமாயிருக்கிறது. வெளியில் சூரியவெப்பம கொடுமையா யிருக்கிறது. வெளியி லலையு மொருவன் நிழலிற் சென்று குளிர்ச்சி யடைகிறான். சிறிது நேரத்திற்குப பின் வெளிக்கிளம்பி வெப்பத்தின் கொடுமைக் காற்றது, மறுபடியும மரத்தடிக்கு வருகிறான். இவ்வாறு நிழலினின்று வெளியிற் போவதும, வெயிலினின்று நிழலிற் செலவதுமாயிருக்கிறான். இப்படிச் செய்கிறவன் அவிவேகி. ஆனால் விவேகியோ நிழலைவிட்டு நீங்கான். அப்படி, ஞானியின மனமும் பிரஹ்மத்தை விட்டு நீங்குவதில்லை. ஆனால் அஞ்ஞானியின் மனமோ பிரபஞ்சத்தி லுழன்று துக்கப்படுவதும, சிறிது நேரம பிரஹ்மத்திற்குத் திரும்பி சுகமடைவதுமாயிருக்கிறது. ஜகமென்பது நினைவே. ஜகம் மறையும்போது அதாவது நினைவற்றபோது மனம ஆனந்தத்தை யனுபவிக்கின்றது; ஜகம தோன்றும்போது அது துக்கத்தை யனுபவிக்கின்றது.

இச்சா ஸங்கல்ப யத்நமின்றி யெழுந்த ஆதித்தன சன்னிதி மாத்திரத்தில் காந்தக்கல் அக்கினியைக் கக்குவதும, தாமரை மலாவதும், நீர வற்றுவதும, உலகோர் தத்தம காரியங்களிற் பிரவிருத்தித்து இயற்றி யடங்குவதும, காந்தத்தின்முன் ஊசி சேஷ்டிப்பதும் போல ஸங்கல்ப ரகிதராயிருக்கும ஈசன சன்னிதான விசேஷ மாத்திரத்தால நடக்கும முத்தொழில அல்லது பஞ்ச கிருத்தியங்கட் குட்பட்ட ஜீவர்கள தத்தம காமானுசாரம சேஷ்டித் தடங்குகின்றனர். அன்றி, அவர் ஸங்கல்ப ஸஹித ரல்லா. ஒரு கருமமு மவரை யொட்டாது. அது லோககருமங்கள் சூரியனை யொட்டாததும, ஏனைய சதுர்

பூதங்களின் குணாகுணங்கள் வியாபகமான ஆகாயத்தை யொட்டாததும் போலும்.

எந் நூலிலும் முக்தி யடைவதற்கு மனத்தை யடக்க வேண்டுமென்று சொல்லப்பட்டுள்ளபடியால் மனோ நிக்ரகமே நூல்களின் முடிவான கருத்து என்றறிந்துகொண்ட பின்பு நூல்களை யளவின்றிப் படிப்பதாற் பயனில்லை. மனத்தை யடக்குவதற்குத் தன்னை யாரென்று விசாரிக்க வேண்டுமே யல்லாமல் எப்படி நூல்களில் விசாரிப்பது? தன்னைத் தன்னுடைய ஞானக்கண்ணாற்றானே யறியவேண்டும் ராமன் தன்னை ராமனென்றறியக் கண்ணாடி வேண்டுமா? 'தான்' பஞ்சகோசங்களுக்குள் ளிருப்பது; நூல்களோ அவற்றிற்கு வெளியிலிருப்பவை ஆகையால் பஞ்சகோசங்களையும் நீக்கி விசாரிக்கவேண்டிய தன்னை நூல்களில் விசாரிப்பது வீணே. பந்தத்திலிருக்கும் தான் யாரென்று விசாரித்து, தன் யதார்த்த சொரூபத்தைத் தெரிந்துகொள்வதே முக்தி சதாகாலமும் மனத்தை ஆத்மாவில் வைத்திருப்பதற்குத்தான் 'ஆத்மவிசார' மென்று பெயர், தியானமோ தன்னை ஸச்சிதானந்த பிரஹ்மமாக பாவிப்பது. கற்றவை யனைத்தையும் ஒரு காலத்தில் மறக்கவேண்டிவரும்.

குப்பையைக் கூட்டித் தள்ளவேண்டிய ஒருவன் அதை யாராய்வதா லெப்படிப் பயனில்லையோ அப்படியே தன்னையறியவேண்டிய ஒருவன் தன்னை மறைத்துக்கொண்டிருக்கும் தத்துவங்க ளனைத்தையும் சேர்த்துத் தள்ளிவிடாமல் அவை இத்தனை யென்று கணக்கிடுவதாலும், அவற்றின் குணங்களை ஆராய்வதாலும் பயனில்லை. பிரபஞ்சத்தை ஒரு சொப்பனத்தைப்போ லெண்ணிக்கொள்ள வேண்டும்.

ஜாக்ரம் தீர்க்கம்; சொப்பனம் க்ஷணிக மென்பது தவிர வேறு பேதமில்லை. ஜாகரத்தில் நடக்கும் விவகாரங்க ளெல்லாம எவ்வளவு உண்மையாகத் தோன்றுகின் றனவோ அவ்வளவு உண்மையாகவே சொபபனததில் நடக்கும விவகாரஙகளும அககாலததிற் றோன்றுகின்றன. சொப்பனத்தில் மனம வேறொரு தேகததை யெடுததுக் கொளளுகிறது ஜாக்ரம சொபபன மிரண்டிலும நினைவு களும நாமரூபஙகளும ஏககாலததில நிகழ்கினறன

நலலமன மென்றும கெட்டமன மென்று மிரண்டு மனங்களிலலை மனமொன்றே வாசனைகளே சுபமென் றும அசுபமென்று மிரண்டுவிதம. மனம சுபவாசனை வயத்ததாய் நிற்குமபோது நலலமனமென்றும், அசுப வாசனை வயதததாய் நிற்குமபோது கெட்டமனமென்றும் சொல்லபபடும பிறா எவவளவு கெட்டவர்களாயத் தோன்றினும அவர்களை வெறுக்தலாகாது. விருபபு வெறுபபுக ளிரண்டும வெறுககததக்கன. பிரபஞ்சவிஷ யஙகளி லதிகமாய் மனத்தை விடக்கூடாது. சாததிய மானவரையில், அன்னியர் காரியத்திற பிரவேசிககக் கூடாது. பிறருக கொருவன் கொடுபப தெல்லாம் தனக்கே கொடுததுக்கொளளுகிறுன். இவ வுணமையை யறிந்தால் எவன்தான் கொடாதொழிவான் ?

தானெழுநதால் சகலமு மெழும்; தானடங்கினுல சகலமு மடஙகும எவ்வளவுக்கெவவளவு தாழ்நது நடக் கிறேமோ அவவளவுக்கவவளவு நன்மையுண்டு. மனத்தை யடக்கிககொண் டிருநதால் எஙகேயிருநதாலு மிருக்கலாம்.

முற்றிற்று.

---

# விசாரசங்கிரகம்

---

## I. நான் யார்?

### அவதாரிகை

இதில, "நான் யார?" என்கிற ஆதமவிசாரம் செய்ய வேணடிய மாாககம் தெளிவாகக கூறபபடுகிறது.

1 ஸர்வ ஜீவர்களுக்கும் சுபாவமாய், நான் போனேன், வநதேன, இருநதேன், செய்தேனென எல்லா விஷயங்களிலும நானென்று ஒரு போதம தோற்றுகிற தலலவா? அது ஏதென்று விசாரிககில, போதல முதலிய தொழிலகள் தேகததினவே யன்றி வேறன்மையால், தேகமே நானென றன்றோ சொலலுவதாய்த் தோற்று கிறது தேகமோ பிறநததறகு முன இல்லாததாலும், பஞசபூதாதமக மானதாலும, சுழுத்தியில் இலலாமை யாலும, பிணமாய்ப போவதாலும, அதை நானென்னும் போதமாகச சொலலககூடுமா? கூடாதே இபபடி தேகததைதக குறிதது அவாந்தரமாய் நானென் றெழும் போதமே தறபோத மென்றும், அகஙகார மென்றும, அவித்தையென்றுட, மாயையென்றும, மலமென்றும், ஜீவனென்றும், பலவிதமாயச் சொலலப்படுகிறது இதைப பற்றி விசாரியாதிருககலாமா? விசாரிபபதற் கலலவா சகல சாஸதிரங்களும ஏற்பட்டு அத் தறபோத நாசமே

முத்தி யென்று கோஷிக்கின்றன. விசாரிப்ப தெப்படி என்னில், கட்டை முதலிய போலும் ஜடமான இச்சரீரம், நானென்று ஸ்புரித்து வழங்கிவருமா? வராதே. ஆத லால், பிணமான தேகத்தைப் பிணம போலவே இருத்தி, வாக்காலும நானென்று சொல்லாமலிருந்து, இபபோது நானென விளங்குவது எதுவென்று கூர்மையாய் விசா ரித்தால், அபபோது ஹிருதயததில், நான் நான் என்று சத்தமில்லாமல், தனககுததானே ஓாவித ஸ்புரிபபு மாத திரம தோன்றும. அதனை விடாது சும்மா இருநதால், தேகம நானென்னும அகங்காரரூப ஜீவபோதத்தை முற் றிலும நாசமாககி, காபபூர ததிற பற்றிய நெருபபுபோல், தானும சாந்தமாய்விடும. இதுவே மோக்ஷமென்று பெரி யோர்களாலும் சுருதிகளாலும சொல்லபபடுகிறது

2. ஆவரணம ஜீவனை எககாலத்தும மறைக்காது. ஏன்? அஞ்ஞானிகளும் நானென்று சொல்லுவதால் பின் னையோ வென்றால், நான் ஆதமா என்பதை மாத்திரம் மறைதது, நான் தேகமெனத தோற்றுவிக்கிறது. அல்லா மல், நானென்னும ஆதமாவை முறறிலும் தோற்றாமல் மறைததுவிடாது.

3. ஆத்மா சுயமபிரகாச சொரூபம். அதை இப்படி யென்றும் அப்படியென்றும பாவிக்கவேண்டாம. பாவிக் கும நினைபபே பநதம். ஆத்மாவோ இருட்டும் பிரகாசமு மல்லாத தேஜஸானபடியாலே, அதை இவ்விதப பிரகாச மென்று பாவிக்கவேண்டாம் அதுவே ஒரு பநதமாய் முடியும். ஆதமாவோ தானே தன்மயமாய் விளங்கிக கொண்டிருககும். இநத ஆத்மானுசந்தான பகதிரூபத் தியானத்தின் பரிபாகமான அவஸ்தையே ஸமாதியெனப் பட்டு, நிரதிசயானந்த மோக்ஷ கதியைக கொடுககும். மஹான்களும், சுவாத்மானுஸந்தான பக்தி ஒன்றினு

லேயே மோக்ஷ மடையவேண்டுமென்று கூறியிருக்கிறார்கள் நானெனும சங்கற்பரூப தற்போதமே மாயாவிருக்ஷத்தின் வேராகையால, அதனைக கெடுததால், மாயையானது வேரற்ற விருக்ஷம்போலக் கெடும. பகதியென்றும், தியானமென்றும, ஞானமென்றும், அகங்காரத்தைச் சுவாய்க கெடுக்கும இம்மார்க்கத்திற்கே கூறததகும்.

4. தேகம் நானென்பதில், பஞ்சகோச ரூபமான மூன்று தேகஙகளும அடஙகிவிட்டன. அது ஒன்று நீக்கபபட்டால, எலலாம் தானே நீஙகிவிடும. இதைப் பற்றியே மற்ற தேகங்களும ஜீவித்திருப்பதால், பிரததியேகம நீககத் தேவையிலலை நினைப்புமாததிரமே பநதமென்று சுருதிகள முறையிடுவதால், நானெனும் நினைபபு ரூபமான மனதை அவரிடததிலேயே (ஆதமாவிடததிலேயே) இருததிவிட்டு, அவரை மறவாது சும்மா இருபபதே சிரேஷ்டசாதன மெனபது சுருதிகளின் முடிவான ஸித்தாநதம.

---

## II. மனம்

### அவதாரிகை

இதில, மனதின் இலக்ஷணமும், அதன் அவஸ்தைகளும், ஸ்தானமும் சுருககமாயும் விளக்கமாயும் கூறபபடுகின்றன.

1. நம் இந்துசாஸ்திரோக்தவிதமாய் நாம் புஜிக்கும் அன்னத்தின் ஸூக்ஷம பாகத்தாற் கெட்டிபபட்டு, ராகத்துவேஷ காமக் குரோதாதிகளால் விருத்தி யடைநது, மனம், புத்தி, சித்தம, அகங்காரமென்னும அந்தக்கரணங்களின் ஸமுதாயமாய், மனம் என்னும பன்மை யொரு

மைப் பெயரையே பெற்றதாய், நினைத்தல், நிச்சயித்தல் முதலிய நாமங்களுள்ளதாய், ஞானத்தால் அறியப்பட்ட திருசியமாய், ஜடமாய், ஜடமாயினும் ஞானத்தின் சேர்க்கையால் தப்தாயப்பிண்டம் போல சேதனம் போலவே தோற்றுவதாய், பரிச்சின்னமாய, அநித்தியமாய், அவயவாகாரமாய், அரக்கு சுவர்ணம் மெழுகுபோல பரிணமமுறுவதாய், ஸாத்வ தத்துவாத்மகமாய், சக்ஷு முதலிய இந்திரியங்களுக்கு நேத்திராதி ஸ்தானம்போல, ஹிருதய கமலத்தை ஸ்தானமாக வுடையதாய, ஜீவனுக்கு உபாதியாய், தான் ஒரு வஸ்துவை நினைத்து, விருத்திரூபமாய், மூளையில உள்ள அறிவுடன் கூடி, பஞ்சேந்திரியத்துவாரா அவ விஷயங்களை (அறிவோடு கூடியுள்ள) மூளையால கூட்டிக கொடுக்கப்பட்டு, அவ விஷயங்களை நான் அறிந்தேனென்று அறிந்து, அனுபவித்து, திருப்தி யடையப் பட்டதாயுள்ள ஓர் வஸ்து உண்டு ஓர வஸ்துவைச் சாப்பிடலாமா என்று நினைப்பது மனோரூப ஸங்கற்பவிருத்தி, அது நல்லது, பொல்லாதது, சாப்பிடலாம், கூடாது, என்று நிச்சயிப்பது புத்திரூப நிச்சயவிருத்தி. இம மனமே எல்லாத் தத்துவாதமக ஜீவேஸ்வரஜகத்ரூபமா யிருப்பதால், ஞானங்கொண்டு எப்போது ஆத்மாகாரம அடைந்ததோ, அப்போதே எல்லாம் பிரஹ்மமாய்விடும கைவல்யம் என்று சொல்லப்படுகிறது.

2. விஷயங்களை அறிய இந்திரியங்கள சகாயமாய் வெளியில இருப்பதால் புறக்கரணம எனப்படும். மனம உள்ளிலிருப்பதால் அககரணம் எனப்படும். (அகம = உள ; புறம = வெளி ; கரணம = அறிதற்குச சாதனமாய் இருப்பது. அககரணம = அந்தககரணம். நினைவு = ஸங்கற்பம. நனவு = ஜாகரம ) தேகத்தைக் குறித்தே அந்தர் பஹிர் என்று சொலலுவதன்றி, உண்மையில உள்வெளி

இல்லை தோற்றும் ஸாவமும் உளளே இருக்கிறதன்றி வெளியில் இலலை என்பதை அறிவிகக, எல்லாவற்றையும் ஹிருதய கமலாகாரமாக வர்ணிதது வேதம சொனனது அதுவும ஆத்மாவையனறி இல்லை. தடடான் மெழுகுண் டையில், நாஞு லோக அணுககள எபபடி அடங்கி, ஒரே மெழுகாகக காணபபடுகின்றதோ, அபபடியே சுழுத்தி யில, ஸாவ ஜீவாகளும ஒரே இருட்டாகிற அவித்தையில, அதாவது ஸமஷ்டி-மாயையில், லயிதது ஒன்றுபட்டிருப்ப தால், எஙகும ஒரே இருட்டைக காணகிறார்கள் சுழுத்தி யில் ஸதூல ஸூக்ஷ்ம தேககஙகள இருட்டாகிற மாயையில அடஙகி, ஆத்மாவில் லயித்திருககினறன, இந்த இருட்டி லிருநது அகஙகாரம, அதாவது ஸூக்ஷ்மதேகம உண்டா யிற்று. அகஙகாரம என்பது மனம அலலது ஹிருதயம. அவிதததை என்பது காரண தேகம. இம் மனமே ஆதமா கார மாகவேண்டும

3. மனமென்பது உண்மையில ஞான சொரூபமே; நிாமலமாயிருபபதால் அபபோது அதற்கு மனமென் னும் நாமமிலலை. ஒன்றை ஒன்றாக அறியும விபரீத ஞானமே மனமாகும. அதாவது ஞானமாத்திரமாக இருநத சுததஸதவ மனதானது, தன் ஞான சொரூபத்தை மறநத அவிதததையால தானே தமோகுண வசத்தாய் உலகரூபமாய்ப பரிணமித்து ரஜோகுண வசததாய் அதில் தேகாதிகள தானெனறும, உலகம சத்தியமென்றும, இதன மூலமாக உண்டாகும ராகத்துவேஷாதிகளால் புண்ணியபாப கர்மஙகளைச சமபாதித்து, அவ வாசனையால் ஜனனமரணங்களை அடையும்.

சுழுததி மூர்ச்சையாதிய காலங்களில் எவ்வித ஞான மும் அதாவது தன ஞானமோ அன்னிய ஞானமோ அற்

பழு மின்றென்பது எவர்க்கு மநுபவமன்றோ? பின்னர் தூக்கத்தினின்றும 'விழித்தேன்,' மயக்கத்தினின்றும் 'தெளிந்தேன்' என்ற அநுபவம முற்கூறிய நிர்விசேஷ நிலையினின் றுதித்ததோர விசேஷஞானத்தினது தோற்ற மன்றோ? இவ் விசேஷஞானமே விஞ்ஞான மெனப் படுகிறது இவ விஞ்ஞானமானது ஆன்மாவையேனும் அநான்மாவையேனும ஆசரயித்தே விளங்குமல்லாது தனி யாகப் பிரகாசிக்காது இது ஆன்மாவை யாசரயிக்கும போது மெய்ஞ்ஞானம், ஆன்மாகார மனோவிருத்திஞானம், அகண்டாகாரஞான மெனறும, அநானமாவை யாசரயிக் கும்போது அஞ்ஞான மெனறும சொல்லப்படுகிறது. இவ் விஞ்ஞானம ஆன்மாவை யாச்ரயித்து ஆன்மாகார மாக விளங்கும் ஸத்தியே அஹம்ஸ்புரிப்பு எனச் சொல் லப்படுகிறது இந்த ஸ்புரிப்பு வஸ்துவை விட்டுத் தனி யாக இராது. இந்த ஸ்புரிப்பே வஸ்துவை அபரோக்ஷப படுத்தற்கான தக்க குறியாம. என்றாலும் இதுவே வஸ்து நிலை யாகாது இந்த ஸ்புரிப்பானது எதனை ஆசரயித்து விளங்குகிறதோ அந்த மூலமே வஸ்து அல்லது ப்ரஜ்ஞான மெனப்படும. வேதாந்தம ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம எனறது இதுபற்றியே யாம. இதனை,

* நிகழுசுயஞ் சோதி யாகி நிகிலசாட் சியுமா மான்மா [றும்
புகலும்விஞ் ஞான கோசம் பொருந்தியே விளங்கு மென்
இகழுவிலா விவவான் மாவை யிலக்கிய மாகப பற்றி
அகமென வனுப விப்பா யகண்டமாம் விருத்தி யாலே

என்னும சுருதியின் தாற்பரியத்தானுந் தெளிக.

* விவேகசூடாமணி

## 4 அவஸ்தாத்திரயம் :—



இந்தப் படத்திற் காட்டியிருக்கும் விஷயங்களை இதனடியிற் காட்டியிருக்கும் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களாகக் கொண்டு, நன்றாகக் கவனித்துப் பொருள் கொள்ளவும்.

(திருஷ்டாந்தம்) (தார்ஷ்டாந்தம்)

1. தீபம் .... ஆத்மா.
2. கபாடம் (கதவு) .... நித்திரை.
3. வாயிற்படி ... மஹத்தத்துவம்.
4. உட்சுவர் ... அவித்தை (காரணதேகம்).
5. பளிங்குமணி (கண்ணாடி) . .. அகங்காரம்.
6. பலகணிகள் (ஜன்னல்கள்) .... ஐந்து ஞானேந்திரியங்கள்.
7. உள்மனை .... காரணதேகம் விளங்கும் சுழுத்தி.

8. நடுமனை .... சூட்சுமதேகம விளங்கும் சொப்பனம்.
9. முற்றம் .... ஸதூலதேகம விளங்கும ஜாககிரம்.

இப்போது சொன்ன திருஷ்டாந்ததால் ஆத்மாவின் அசலமான இருப்பும, அகங்காரத்துககும அதறகுமஉள்ள பேதமும, நாம அவஸதாத்திரயம அடைவதும நன்ருய் விளஙகும். ஆதம (1) தீபம, சுழுததியில, அவித்தை (4) யுட்சுவரும் நிததிரைக் (2) கதவும கூடின காரணதேக (7) வுள்மனையில் தானே விளங்க, காலகாமாதி பிராணனல் உறக்கக் (2) கதவம திறக்கவும், மஹததத்துவ (3) வாயிற் படிக் கடுத்த அகஙகாரப (5) பளிஙகுமணி, ஆதமபிரதி பலனப பிரகாசத்துடன, சொபபன (8) நடுமனையையும், பஞ்சேநதிரியப (6) பலகணிவழி, ஜாககிர (9) முற்றத்தை யும் விளககி, காலகர்மாதி வாயுவால் நித்திராகபாடம மூடவே, நனவுகனவுகளோடு நானற்று, தான் (ஆதமா) மாத்திரம என்றும் விளஙகும்

5. ஜாககிர சொப்பன சுழுததிகளில், நேத்திரம கண்டம ஹிருதய மென்னும ஸதான முன்னிலையாகப போகங்களைப புஜிககினும், அஜ் ஜீவன் முககியஸதானம ஹிருதயமாதலால், அதைவிட்டு எபபோதும நீஙகுகிற தில்லை. மனதுக்கு ஸதானம கண்டம, புததிக்கு ஸதானம முகம் அல்லது ஹிருதயம, அகஙகாரததிற்கு ஹிருதயம அல்லது ஸர்வாஙகமெனறு அனேகவிதமாய்ச சொலலி யிருந்தாலும், இவற்றின் சமஷ்டியாகிற ஒரே மனமென் னும அநதககரணததிறகு, ஹிருதயமே ஸதானமென்று முடிவாகச் சுருதி கூறுகிறது. சாஸதிரங்களில் அனேக விதம சொல்லும். அவற்றை யெல்லாம் ஆராயநதே, சுருக்கமாயும உண்மையாயு முளள மார்க்கததை இவ் விதம் பெரியோரகள கூறியிருககின்றனர். நானென்னும்

அகங்காரத்தின் முக்கிய ஸ்தானம் ஹிருதயமே யென்பது அனுபவம

## III. ஜகம்

### அவதாரிகை

இதில, உலகின் மித்தியாத்தன்மையும், அது நமக்கு அன்னிய மிலாமையும் கூறப்படுகின்றன.

1 திருஷ்டி —ஈத்தப பொய்யான உலகத்தைப் பொய்யாக்கி, ஒன்றான பிரஹ்மததை அறிவிப்பதிலேயே வேதத்தின் முக்கியக் கருதது இதை அறிவிப்பதற் காகவே, உலகிற்கு சிருஷ்டி அங்கீகரித்தது அதிலும், மந்த அதிகாரிகளுககுக கிரம சிருஷ்டியால் பிரஹ்மத்தில் பிரகிருதி, மஹத்தத்துவம், தன்மாத்திரை, பூதம, உலகம, தேகம இவைகள கிரமமாய் உண்டாயினவென்று சொல் லும். தீவிர அதிகாரிகளுக்கு, ஆத்மாவாகிற தன்னை அறியாத தோஷத்தால் உண்டான தன் னினைவாலேயே தன் சொப்பனமபோல் இவவுலகம உண்டாயிற்றென யுகபத் சிருஷ்டியாற் சொல்லும எப்படியாவது ஜகம் பொய்யெனச் சாதித்து வஸ்துவை அறிவிப்பதிலேயே தாற்பரியம

2. திருக்குதிருசியவிவேகம :—

| | | |
|---|---|---|
| திருசியம் (ஜடம்) | .... | திருக்கு (பார்ப்பது). |
| தேககடாதி | .... | கண். |
| கண் | .... | சக்ஷுரிந்திரியம். |
| சக்ஷு | .... | மனம். |
| மனம் | .... | ஜீவன். |
| ஜீவன் | .... | அறிவு. |

இப்படி அறிவாகிற நாமே எல்லாப்பதார்த்தங்களையும அறிவதால் நாமே திருககு. மற்ற கடாநதமாயுள்ள விஷயஙகள் நம்மால் அறியபபடுவதால் திருசியம இத் திருககு திருசியங்களிலும, ஒன்று மறறொன்றுசகுத திருக்காயிருப்பினும், அது வேறொன்றுககுத் திருசியமா யிருப்பதால, அவை உண்மையில திருககாகா நாம ஒன்றாலும அறியபபடாததால் திருசிய மாகாவிட்டாலும, எல்லாவற்றையும அறிவதால திருககே யாயினும, அதுவும திருசியத்தைப் பறறியே வந்த தல்லது, உண்மையில திருசியம் நமக்கன்னிய மில்லாததால, திருக்கும அல்ல. ஆகவே நமக்கு உண்மையில இரண்டும இலலை நாம் ஒருவனே திருக்கு திருசியங்கட்கு உட்படாதவன் மற்றவை உட்பட்டனவே.

---

## IV. ஜீவன்

### அவதாரிகை

இதில், ஆத்மாவே ஜீவனென்று, ஜீவனுடைய இலக்ஷணம் விவரமாகக கூறபபடுகிறது.

நானென்பதையன்றி மனமில்லை மனமும அகங்காரமும் ஒன்றே மற்ற புத்தி, சித்தமும இதுவே. மனம், புத்தி, சித்தம், அகங்காரம—இவையெல்லாம் ஒரேமனந தான்; ஒருவனுக்கு அநத அநத வேலையில், அநத அநத நாமம் வருவதுபோல், இம் மனமாகிற அகங்காரத்தையன்றி ஜீவன் வேறில்லை அகஙகாரம உண்டாகும் போதே, பழுக்கக் காய்சசின இருமபுக்குண்டுபோல ஆதமசுபாவததோடும் அததியாஸமாய்த் தோற்றுகிறது. இருமபுக்குண்டில் அக்கினி இருககினறதே; அதன் தாற்

பரியம் என்ன? அபேதமாயிருக்கிறதென்று அர்த்தம் பழுக்கக்க காய்ந்த இரும்புக்குண்டைப் போல, ஆத்மா வுடன் தாதாத்மியமாயக் கூடியிருக்கும் அஹங்காரரூபனே ஜீவனுதலால், அஹங்காரம் சித்ப்ரகாசத்தோடு கூடி யிருக்கும் மனமாகிற அஹங்காரரூப ஜீவனை யன்றி மேற்படி ஜீவஸாக்ஷி யாகிற ஆத்மா இல்லை. அவ்வாத மாவே, முற்கூறிய குண்டில் உள்ள அக்னிபோல் தாக்கின்றி, ஹிருதயத்தில் விளங்குவதன்றி, ஆகாசம்போல ஞானமாத்திரமாய், ஏகமாய் விளங்கும் பிரஹ்மமாகப் பிரகாசிக்கிறது. குண்டு = அஹங்காரம், நெருப்புச்சுண்டு = ஜீவன்; குண்டிலிருக்கும் அக்கினிமாத்திரம் = ஸாக்ஷி யாகிய ஆத்மா; ஏகமாயுள்ள அக்னிஜ்வாலை = எங்கும் உள்ள ஸர்வஸாக்ஷியாகிய பிரஹ்மம்



## V. பரம்

### அவதாரிகை

இதில், ஆத்மசொரூபமே கடவுளுடைய சொரூபமென்று, அதாவது, அஹம்சொரூபமான ஆத்மாகாரமாகவே சுவாமி யிருக்கிறாரென்று சொல்லப்படுகிறது.

ஹிருதயமென்றும் மனமென்றும் சொல்லுவது, அந்தர் பஹிராய்த் தோன்றும் தத்துவங்களின் சேர்க்கையே. தத்துவங்கள் என்றால் வஸ்துக்கள். (தத்துவம் என்பதற்குப் பொருள்:—1 வஸ்து அல்லது பதார்த்தம்; 2 பிரஹ்மம்; 3 நிஜம் அல்லது உண்மை, 4 தத் = அது, த்வம் = நீ; தத்துவம் = அது நீ இப்படி அநேக அர்த்தங்கள் உள) ஆகையால், வெளியில் காணும் தேகம் உலகம் முதலியவை மனோரூபமேயாம். அதாவது ஹிருதய கமலமே எல்லாரூபமாயும் விளங்குகிறது. இப்படி

ஸர்வாத்மகமான (எல்லா உருவங்களுமான) ஹிருதய கமலமத்தியில், அதாவது மனாகாசத்தில், நானென்னும் ஆத்மஜோதி பிரகாசிக்கிறது இப்படி ஒவ்வொரு தேகத்திலும் விளங்குவதால், இதற்கு ஸாக்ஷியென்றும், துரிய மென்றும் பெயருரைப்பர். இந்த நானென்னும் ஜோதியின் அந்தர்கதமாய், ஸர்வ தேகங்களிலும் ஏகமாய், நானற்று விளங்கும் பரப்பிரஹ்ம மாகிற ஆத்மாகாசமே (ஞானாகாசமே) யதார்த்த வஸ்து இதுவே துரியாதீதம். தீபத்தின் உள்ளில் உள்ள, அந்தக் காலிபிடத்தில் உள்ள பூதாகாசமானது, அந்த ஜ்வாலையின் உள்ளும் புறமும் நிறைந்து, எல்லையற்று விளங்குவது போலவே, ஞானகாச மென்னும் வஸ்து, துரியஜோதியின் உள்ளும் புறமும் எல்லையற்று விளங்குவதாகவே பாவிக்கட்டும். இந்த ஜ்வாலையோடு அபேதமாய், எங்கும் எல்லையற்று விளங்குவதே சொரூபமாம ஜ்வாலையைப் பற்றிக் கவனிக்க வேண்டாம. நானற்ற இடமே வஸ்துவென்று தெரிந்தாற் போதும. பிரஹ்மசொரூபமானது ஆத்மசொரூபமாகத் தன் ஹிருதயத்தில் நிவஸிப்பதற்கு, ஸாவஜனங்களும் 'நான், நா'னென்று, மார்பைத் தொட்டுக் காட்டுவதே போதுமான ஸாக்ஷி. எல்லா ஜீவாகளின் ஹிருதயத்தில் பிரகாசிக்கிறபடியால், பிரஹ்மத்திற்கு ஹிருதயமென்று ஒரு பெயருண்டு. 'அஹம், அஹ மென்று ஹிருதயத்தில் தன்மயமாய் விளங்கும் தெய்வத்தை விட்டு, அன்னியமாயிருப்பதாய்த் தேடுதல் கையிலிருக்கும் அதி அபூர்வமான கௌஸ்துப ரத்தினத்தைத் தூர எறிந்துவிட்டு, அற்பமான சங்குமணியைத் தேடுவதற்குச் சமான'மென்று வஸிஷ்டரும் சொல்லியிருக்கிறா. நம்மை சிருஷ்டித்து, இரக்ஷித்து, சங்கரிக்கும் ஒன்றான ஆத்மாவாகிற கடவுளை, கணபதி, பிரமமா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன்,

ஸதாசிவன் முதலிய நானுரூபங்களாகப் பாவனையால் உண்டாக்கிக் கெடுப்பது மகாபாப மென்றே வேதாந்திகள் சொல்லுவார்கள்.

---

## VI. பிரஹ்மவித்தை

### அவதாரிகை

[இதில், பிரஹ்மத்தை அறியும் மார்க்கம் விளக்கப்பட்டிருக்கிறது.]

பிரஹ்மபுர மென்னும் தேகமாகிய பட்டணத்தில், ஹிருதயகமலாஸனத்தில் வசிக்கும் ஜீவனாகிய சிவலிங்கத்தை யறிய, தேகாதிகளை நானென்று பஹிர்முகத்தில் சஞ்சரிக்கும் அகங்காரரூப மனதை ஹிருதயத்தில் அடக்கி, தேகாதிகளில் அஹம்புத்தி நீங்கி, தேகத்திலிருக்கும் நான் யார்? என்னும் விசாரத்தோடு, இருந்தபடியிருந்து நிச்சலமாக விசாரிக்குங்கால், அஹம் அஹம் என்னும் ஸ்புரிப்பு ஸூக்ஷ்மமாய்த் தோற்றும். அந்த நானாகும் (அஹமென்னும்) ஆத்மசொரூபமே, எல்லாமாய், அல்லவுமாய், பாஹ்யாந்தர பேதமின்றி, எங்குமாய் விளங்கும் பரமாத்மசொரூப மென்னும் நிச்சல பாவனையோ டிருத்தல் வேண்டும். இதுவே ஸோஹம் பாவனை யெனப்படும். இதுவே துரிய மெனப்படும். இவ்வித ஸ்புரிப்பு அடங்கின ஸூக்ஷ்மமான இடமே துரியாதீத மென்றும், பின் யோகாஷ்டாங்கத்தில் கூறப்படும் ஜ்வாலா அல்லது ஜோதிரந்தர்க்கதமாய் விளங்கும் ஸர்வ பரிபூரண பரமாத்மா என்றும், ஹிருதயாகாசம் அல்லது தகராகாச மென்றும், மனாகாசம் அல்லது சித்தாகாயமே ஸ்தானமாய்க் கொண்டு எங்கும் பிரகாசிக்கும் ஞானவெளி அல்லது சிதாகாசமென்னும்

சிதம்பரப பிரஹ்மமென்றும், சிவமென்றும, ஆத்மா வென்றும், ஞானமென்றும பலவாறுகச் சொல்லப்படும கடவுளாகிய பரதேவதா வஸ்து. வெகுகாலம, முற்கூறிய அஹமென்னும் ஆதமானுஸந்தான மாகிற ஸோஹம பாவனையால, (ஸ: = பரமாத்மா; அஹம = நானென விளங்கும் ஆத்மா) நிரந்தரம நிச்சலமாய்த் தியானித்து வந்தால, ஹிருதயத்தில உள்ள அஞ்ஞான அந்தகாரமும அஞ்ஞான தறகாரியங்களான ஸாவப பிரதிபந்தங்களும நீங்கி, பரிபூர்ண ஞானமானது லப்தமாகும். இங்ஙனம், தேகாலயமாகிய பட்டணத்தில் ஹிருதயகுகையிலிருக்கும் வஸ்துவை அறிதலே, ஸர்வபரிபூரணமா யிருக்கும வஸ துவை அறிதலாம்; தேகம் அல்லது ஹிருதயமே ஸாவமா யிருப்பதால். "நவத்துவாரத்துடன் கூடிய தேகமாகிய புரியில் ஞானி சுகமாய் வசிப்பான்" என்னும கீதையும்; "தேகமே தேவாலயம், ஜீவனே சிவன்; அவனே ஸோஹம் பாவனையாற் பூஜிக்கின் முக்தி யுண்டாகும்; பஞ்சகோசாத மகமான தேகமே குகையென்றும, ஹிருதயமே குகை யென்றும, அதில வசிக்கும் பரன் குகேசனுவான்" என் னும சுருதியும பிரமாணம். இங்ஙனம பிரஹ்மத்தை அறியும மார்க்கமே தகரோபாஸனை அல்லது தகரவித்தை யென்றும், பிரஹ்மவித்தை யென்றும சொல்லப்படும; இதைக்காட்டிலும் வேறு என்ன சொலலக்கூடும்? ஊகித்து அறிந்துகொள்ளவேண்டும்.

---

## VII. கடவுட்பூஜை

### அவதாரிகை

[இதில, ஸ்வாதமபாவனையை (ஸவஸ்வருபஸ்மரணையை) மறவாதிருத்தலே சிறந்த கடவுடபூஜை யென்றும் தபஸென் றும் சொலலப்படுகிறது.]

அஹமபிரஹம பாவனையை விடாதிருக்கவேண்டு மென்பதே நிர்க்குணபூஜையின் தாற்பரியம; அஹம் பிரஹ்மத்தியானமே, யஜ்ஞ, தான, தப, விரத, ஜப, யோக, பூஜை அனைத்துமாதலால் தான் செய்யும நிஷ்டைக்குப் பிரதிபநதமாக என்ன ரூபங்கள் தோன்றினும், மனதை அவ்வழியே செலலவொட்டாமல், ஆதமசொரூபமாகிற தன்னிடத்திலேயே நிறுத்தி, நம்முன்னே என்ன என்ன நடக்கிறது, நடப்பது நடக்கட்டும பார்ககலாமென்று, சாக்ஷியைபபோல் பார்ததுககொண்டிருககப பழகுவதே, அப் பிரதிபந்தம் நீங்கும் உபாயம்; வேறில்லை. தன்னை மாத்திரம் விட்டுவிடக்கூடாது இப்படி ஹ்ருதயததிலுள்ள அஹமசொரூபததில மனதை இருத்துவதே, யோகம், தியானம, ஞானம், பகதி, மநதிரம், ஜபம் முதலிய எல்லா மாம். அஹம்சொரூபமான ஆத்மாகாரமாகவே சுவாமி இருப்பதால், அவரிடத்தில் மனதை நிரந்தரம் லயிக்கச செய்வதுதான், எல்லா உபசாரங்களுமாமென்று சொல்லப பட்டிருக்கிறது. மனமொன்று அடங்கினல், எலலாம் கைவசப்பட்டதாகும். மனதே குண்டலி வேறே ஒரு பாம்பெனல் ஸதூலதிருஷ்டிகளுககுச் சொல்லுவதாம். (ஸதூலதிருஷ்டிகள் = ஸ்தூலபுத்தி யுள்ளவர்கள). ஆறு தார(ஷட்சகர)தரிசனை முதலிய அனைத்தும் மனக் கற்பனையே ஆரமப யோகிகளுக்கே அது. நம்மையே விக்கிரஹாதிகளில் ஆவாஹித்துப் பூஜிக்கிறோம; ஆந்தர பூஜை தெரியாததால். ஆகையால், அனைத்தையும் அறி யும் ஞானமாகிற நம்மைத தெரிநதால், எல்லாம் அறிந்த தாகும். நானுபாவனையோடு கூடியிருககும் நாம், கடவு ளாகிற ஆதமாவைப் பாவித்துப் பாவித்து வந்தால், அநத ஏகபாவனையால் அனேக பாவனைகள் நீங்கி, ஏக பாவனையும் நசிக்க அறிவதே வஸதுவை (கடவுளை) அறிவ

தாம். எப்போதும், ஸர்வ பரிபூர்ணமா யுள்ள ஸ்வாத்ம பாவனையை (ஸ்வஸ்வரூபஸ்மரணையை) மறவாதிருத்தலே முடிவான யோகமும், ஞானமும், மற்றுமுள்ள எல்லா தபசுகளுமாம். தன்னிலையை விட்டு, பஹிர்முகமாய் வியவகாரங்களில் மனது சென்றாலும், ஓ! ஓ! தேகாதிகள் நாம் அல்லவே, நாமார்? என்னும் விசாரத்தால் மறுபடியும் தன்னிலையிலேயே நிறுத்த வேண்டும் நானார் என்னும் விசாரமானது ஸர்வ அனர்த்த நிவிருத்திக்கும், ஆனந்தப்பிராப்திக்கும் முக்கியமான ஹேது எத்தனை தரம் திருப்பித் திருப்பிச் சொன்னாலும் விஷயம் இவ்வளவு தான்.

---

# VIII. முக்தி

[இதில், ஆத்மாவே நான் அதாவது, சிவோஹ மென்று பல காலம் நிரந்தரம் அனுசந்திக்கும் பிரஹ்மத்தியானமாகிற நித்தியாஸனத்தினாலேயே மோக்ஷ மடையக்கூடு மென்று விளக்குவதுடன் ஜீவன்முக்தன், விதேகமுக்தனுடைய இலக்ஷணங்களும் இசைக்கப்படுகின்றன.]

1. மனோரூபஜீவன் தான் கேவலம் ஆத்மசொரூபமாகவே இருப்பதை மறந்த மறைப்பினாலேயே, ஜீவனென்னும் நாமத்தோடு மனோரூபமாய்ப் பந்தத்தை அடைந்திருப்பதால், எப்போதும் தானாகவே இருக்கும் ஆத்மாவைத் தேடுவது, இடையன் ஆட்டைத் தோள் மேலேயே போட்டுக்கொண்டு, ஆடு எங்கே என்று தேடுவதைப்போலவே இருக்கிறது ஆயினும் தன்னை மறந்த ஜீவன், தன்னை ஆத்மா என்றே ஒருதரம் அறிந்தது கொண்டு, அதுவேயாய்விடும் மோக்ஷத்தை, அதாவது, ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை, பூர்வ ஜன்மாந்தர வாசனைப் பிரதிபந்தத்தால் அடையாமல், அடிக்கடி தான் ஆத்மாவா

பிருபபதை மறநது, தேகாதிகள் நானெனறே பிரமிப் பன். இந்த நெடுநாள வாசனையானது, 'தேகாதிகள் நானல்ல; ஆத்மாவே நா'னென்னும் நெடுநாள் அனு ஸந்தானததாலேயே நீங்கும. ஆதலால், தேகாதிகள் நானென்று பிரமிக்கும மனமென்னும் அகஙகாரரூப ஜீவன், ஸாவ தேவாதமகமாய், தானுயிருக்கும ஆதம தேவனதயே தானென்று, நெடுநாள தன்னைததானே பூஜித்து, வாசனைகளையே ரூபமாய்க் கொண்டிருக்கும் மனதை ஜயித்து, ஆத்மஸாக்ஷாத்கார மாகிற பிரஹம கைவல்யததை அடையவேண்டும். மனோநாசம் செய்த ஆத்மானுஸநதானமானது, பிணஞசுடு தடிபோல் தானும் நீங்கிவிடும. இதுவே முததி ஆதமா, ஞானம், அறிவு பிரஹமம, சிவம் முதலியன ஒரு வஸதுவே. ஒருவன் ஒரு பெரிய உததியோகஸதனைப பார்ததுகொண்டு, தான் உத்தியோகஸதன் ஆவானு? அதறகான முயற்சி செய்து அநத நிலையை அடைநதால ஆவான். அதுபோல, மனோ மயமாய்ப பந்தபபட்டிருக்கும ஜீவன், ஆத்மாவே தானென்று ஒருதரம் அறிநததுகொண்டு, ஆதமாவாகிற தெய்வம ஆய்விடுவானு? மனதை நாசம செய்தாலன்றிக் கூடாதல்லவோ? தரித்திரன் இராஜாவைப் பார்த்ததா லேயே, நான் இராஜாவென்றால ஆவானு? அதுபோல, ஆத்மாவே நான், அதாவது சிவோஹமென்றே, பலகாலம் நிரநதரம் அநுஸநதிதது, மனதாகிற பாசத்தை வென்று லல்லாமல், மனோபசமன ரூபமான பரமசீதள சிவம் அடையப்படாது. "ஜீவனே சிவன், சிவனே ஜீவன்; அநத ஜீவன் கேவலம சிவனேதான்; உமியாற் கட்டுப்பட் டிருக்கிறவரையில நெலலாயிருக்கிறது; உமி நீங்கினுல்அரிசி ஆகிறது. அதுபோலக கர்மபாசத்தாற் கட்டுப்பட்டிருக் கிற வரையில் ஜீவனு யிருக்கிறுன்; அஞஞானபாசம் நீங்கி

ஞல் எப்போதும் சிவனுகின்ற தேவனைப் பிரகாசிக்கின்றான்' என்று சுருதியும் கோஷிக்கின்றது. "ஹிருதயத்திலுள்ள அஞ்ஞானரூப மனமாகிற நானென்னும் சங்கற்பம் நசிக்கிறவரையில், மனமானது ஹிருதயத்தில் தடுக்கப்பட வேண்டியது. இதுவே ஞானம்; இதுவே தியானமுமாம். மற்றவெல்லாம் வாக்கு விஸ்தாரமும் சாஸ்திர விஸ்தாரமுந்தான்" என்று சுருதியிற் சொல்லியபடி, அவனிடத்தில மனதை நிறுத்தி, அவனை அடைவதே முடிவான தாற்பரியம்.

2. பிராமணன் என்ன வேஷம்போட் டாடினுலும அவன் மனதில் நான் பிராமணன் என்னும பாவம எப்படியோ, அப்படியே எந்த வியவகாரங்களில் இருந்தாலும தேகாதி நானெனத் தோன்ருமல் ஆத்மா நானென்னும் திடபாவம வரவேண்டும். இப்படி மனமானது தன்னிலையில் அடங்க அடங்கச் சுகம் ஆவிர்பவிக்கும. அப்பால் மனதில் விஷய சுகதுக்கங்கள தாக்கா. எல்லாம சொப்பனம போலப் பற்றற்றுத் தோன்றும். மனதில், இது நல்லதா? அது நல்லதா? இது செய்யலாமா? அது செய்யலாமா? இவை முதலிய நினைவுகளுக்கு இடங்கொடாமல, நினைப்பு வரு மப்போதே தன்னிடத்தில் அந்நினைப்பை இருத்திவிடவேண்டும். கொஞ்சம் இடங்கொடுத்தால், தலைகீழாய்த் தளளிவிடும; தனக்கு ஹிதமாயிருப்பவனைப்போலிருந்து, கெடுதி செய்விக்கும் ஹிதசத்துருவைப்போல தன்னிலையில இருக்கிற மனது நானென்றும், எனக்கு அதிக வியவகாரங்கள இருக்கின்றனவென்றும் ஸங்கற்பிக்குமா? இப்படிப்பட்ட ஸங்கற்பங்களன்ருே பந்தம். ஆதலால, இவ்வித நினைவுகள் வாசனையால் வந்தாலும, மனதை நினைவின் வழி விடாமல், தன்னிலையில் இருத்த முயல்வதோடு, வியவகாரத்தில் உதாஸீன பாவத்தோடும்

இருக்கவேணடும். தன்னை மறப்பதால் அல்லவா, இவ்வித நினைவுகள உண்டாகி மேன்மேலும அனர்த்தம் உண்டாக்குகின்றன. விவேகத்தால், நானொன்றும் செய்கின்றேனில்லை, எலலாம திரிகரண சேஷ்டைகளே யென்று ஸஙகற்பிப்பது, வாசனையாகின்ற நினைவின் வழி ஓடும மனதைத் தன்னிலையில இருத்த உபாயமே யானாலும், நினைவின்வழி சென்றாலன்றோ முற்கூறிய விவேகத்தால் அதைத் தடுககவேண்டும. ஆதமதேவதை யாகிற தன்னிடததில இருததினதும, அதைவிட்டு நீஙகாமல் வியவகாரத்தில் உதாஸீனபாவத்துடன் இருககிறதுமான மனது—தேகாதிகள நானென்றும ; வியவகாரஙகளில் பிரவிருத்திக்கிறேனென்றும் ; மறுபடியும, விவேகத்தால் நானொன்றும் செயயவில்லை, திரிகரணசேஷ்டைகளேயென்றும—இவை முதலாகிய நினைவுகளை ஸங்கற்பிக்ககூடுமா? எவ்விதத்தாலும மெல்ல மெலலத் தன்னை (கடவுளை) மறவாதிருக்க முயற்சிககவேண்டும அது கைவந்தால் எல்லாம ஸித்தியாகும். மற்றொரு விஷயததிலும் மனதைச் செலுத்தவேண்டாம பித்தனைபபோல் கர்மத்தால் நேரிட்ட வியவகாரங்களைச் செய்தாலும, நான் செய்கின்றே னென்று நினைபபு வராமல், தன்னிலையிலேயே இருக்கவேண்டும. உதாஸீன பாவத்துடன், இவ்வித பகதியை விடாமல், எத்தனையோ தாஸாகள எவ்வளவோ வியவகாரஙகள செய்திருககவில்லையா ?

3. மனமென்பதற்கு ஸத்வகுணமே சுபாவ மாதலால், ஆகாயததைபபோல் ஸவச்சமாயிருப்பதே மனாகாசம். இது ரஜோகுணத்தின் சலனததோடும, தமோகுணத்தின் உலகாகார பரிணாமத்தோடும சேர்ந்து கெட்டிப்பட்டு, ஸதூல மாய்விட்டதால் வஸது தரிசனம் கிடைககிற தில்லை. அதிக ஸதூலமான கட்டபாரை

பால மெல்லிய பட்டு வஸ்திரத்தை இழையிடக்கூடாதது போலவும், காற்றினால் அதிக சலனமுள்ள தீபத்தால அதிஸூக்ஷ்மமான வஸ்துக்களின இலக்ஷணங்களை நிர்ண யிக்கக்கூடாதது போலவும், ஸ்தூலமாயும் சஞ்சலமாயு முள்ள, தமோகுண ரஜோகுண வசத்தான மனத்தால வஸ்துவின் அனுபவம கூடாது; வஸ்து அதிஸூக்ஷ்மமும நிச்சலமுமானதால். அநேக ஜன்மங்களிற் செய்துவந்த நிஷ்காமிய கர்மங்களால, மலம (பாபம) நீங்கின மனது, சற்குரு மூலமாய்ச் சிரவணாதிகள இயற்றி, நெடுங்காலம பிரஹ்மத்தியானமாகிற நிதித்தியாஸனம செய்யவே, மன தின தமோகுண ரூபமான உலகாகாரபரிணாம மடை தலும், ரஜோகுண ரூபமான அவற்றின் சலனங்களும நீங்கும். நீங்கவே, மனம ஸூக்ஷ்மமும் நிச்சலமு மாகும். தியானத்தால ஸூக்ஷ்மமான மனதில், அநந்த சொரூபானந்தம் ஆவிர்ப்பவிக்கும (தோன்றும்)—நிரந்தர தியானத்தால ரஜோகுண தமோகுணங்களை நீக்கவே, அந்த ஸூக்ஷ்ம மனதுக்குச் சொரூபானந்த-ஆவிர்ப பாவம நன்றாய்த் தெரியும. இந்த ஸூக்ஷ்ம மனதோடு சொரூபானுபவ முள்ளவனே ஜீவன்முக்தன். யோகிகள இந்த மனாகாச மூலமே அனைத்தையும அறிகின்றார்கள. இதனையே நிர்க்குணப்பிரஹ்ம மென்று ராமகீதையிற் சொல்லியிருக்கிறது. இவ்வனுபவாதீதமாய், வாக்கு மனதுகட்கு அகோசரமாயுள்ளது நிர்க்குணாதீதப்பிரஹ்மம். அந்த அகண்டாகார ஸ்திதியை அடைந்தவனே விதேகமுக்தன். அதாவது, இந்த ஸூக்ஷ்மமனதும லயித்து, சொரூபத்தின் அனுபவமும இல்லாமல, ஆனந் தக்கடலின் மூழ்கி, ஒன்றும தோற்றாமல் அம்மயமாயிருப பவனே விதேகமுக்தன். மேலொரு நிலையும் இல்லை. இதுவே முடிவு.

4. அஹம்பிரஹ்ம மென்னும் ஆத்மாகார விருத்தி ஸஹஜமாக ஆக, மனச்சலனமும் உலகநினைவும் மெல்ல மெல்ல நீங்கும். அப்போது தடையில்லாததால், நாம பிரஹ்மமாயிருப்பது நன்றாய் அனுபவமாகும். மனமின்றி அனுபவமும் கூடாதாகையால், அதிஸூக்ஷ்மமான விருத்தியோடுங்கூடின மனதால் அம்மயமாகவே அனுபவிக்கலாம். விதேகமுக்தியில் அனுபவமுமில்லை அது கடந்ததில்லை, அதீதமில்லை. தேகம் நாமல்ல, நாம் பிரஹ்ம சொரூபமான ஆத்மாவே - என்னும் திடநிச்சயம் உற்றவனே ஜீவன்முக்தனானாலும், மனோநாசமில்லாதவர்க்குப் பிராரப்தத்தால் தோன்றும் திருஷ்ட விஷயங்களில், ஏக தேசம் துக்கம் தோன்றவுங்கூடும்; ஆனந்தானுபவமும் இருக்காது - மனச்சலனம் நீங்காமையால் நெடுங்கால தியானத்தால், ஸூக்ஷ்மமும் நிச்சலமுமான மனதுக்கே ஜீவன்முக்தியின் ஆனந்தானுபவங் கூடும்.

---

# IX. யோகாஷ்டாங்கம்

## அவதாரிகை

*[இதில், பிராணபந்தனத்தால் மனதைத் தன்வசப் படுத்தி, ஆத்மஸாக்ஷாத்காரம் அடையும் யோகமார்க்கம் கூறப்படுகிறது ]*

1. முன் அத்தியாயத்தின் முடிவில் சொல்லப்பட்ட இவ்வித தியானரூப பக்தி ஸித்திப்பதற்கே, இயம நியமாதி அங்கங்களும் ஸாதனமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இவை யோகாங்க, ஞானாங்கபேதத்தால் இரு பிரிவாயிருக்கும். பிராணபந்தனஞ் செய்வது யோகமும், மனோநிக்கிரகஞ் செய்வது ஞானமுமாம். அவரவர் வாசனைப்படி, அந்த அந்தப் பக்குவிகட்கு, இரண்டி

லொன்று சுலபமா யிருக்கும் யோகத்தின் பிராணபந்தனத்தால் மனமும், ஞானத்தின் மனோநிக்கிரகத்தால் பிராணனும் பந்தப்படுவதால், இரண்டும் ஒன்றேயாம். மனதின் அடக்கமே இரண்டின் தாற்பரியமும்

2. இயமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், ஸமாதி ஆகிய இவ்வெட்டும் யோகாங்கங்களாம். இவற்றுள் பிராணாயாமமாவது, ரேசகம் பூரகம் கும்பகம் மூன்றும் சேர்ந்தது ரேசகமாவது, பிராணவாயுவை வெளிவிடல் பூரகமாவது, பிராணவாயுவை உள்ளே இழுத்தல். கும்பகமாவது பிராணவாயுவை உள்ளே தம்பித்தல். ஸர்வசாஸ்திரங்களிலும், ரேசக பூரக மாத்திரைகள் சமமாயும், கும்பகம் இரண்டு பங்கும் செய்யவே சொல்லியிருக்க, இராஜயோக சாஸ்திரத்தில், பூரகத்தில் நான்குபங்கு கும்பகமும் இரண்டு பங்கு ரேசகமும் செய்யச் சொல்லியிருக்கிறது. அதிலும் இதுவே உத்தமமாயிருக்கும். முற்கூறியவண்ணம் ரேசக பூரக கும்பகங்க ளடங்கிய பிராணாயாமத்தை, தன்னால் இயன்ற வளவு மிருதுவாய், கிரமமாய் அப்யஸித்துவரின் சரீரத்தில் ஓர்வித இளைப்புடன், சலனமற்று ஆனந்தமாயிருப்பதற்கான இச்சை கிரமமாக மனதிற்குண்டாம். பின்பு பிரத்தியாகாரத்துக்கு ஆரம்பிக்கவேண்டும். அதாவது, பாஹியத்திலுள்ள நாமரூப விஷயங்களில் மனது செல்லாமல் ஒருவழிப்படுத்துவதாம். இதுவரையில் ஓடியுழன்ற மனதானது, ஓர் நிலையில் நிற்பது அருமையானதால், இதற்கு, (1) பிரணவம் முதலிய மந்திரோச்சாரணம் (மானஸிகமாக); (2) புருவமத்திய நாட்டம்; (3) நாசிகாக்கிரத்தில் திருஷ்டி வைத்திருத்தல்; (4) செவிகளில் உண்டாகும் நாதத்தை மாற்றி மிருதுவாக அனுஸந்தித்தல்; அதாவது, இடது செவியில் உண்டாகும் சத்

தத்தை வலது செவியாலும், வலது செவியில் உண்டா கும் சத்தத்தை இடது செவியாலும் மெல்லக் கேட்பது; இவைகளால், மனது ஒருமைப்பட்டு, ஓரிடமே இருக்க யோக்கியமாகும். பின்பு தாரணை செய்யவேண்டும். தாரணையாவது, மனதைத் தியான யோக்கியமான ஓர் ஸ்தானத்தில் இருத்துவதாம். ஹிருதயமும் பிரஹமரந்திரமுமே சிரேஷ்டமான தியான யோக்கிய ஸ்தானங்களாம் இவ்விரு இடங்களிலுள்ள அஷ்டதள பத்மங்களின் மத்தியில், (பிரஹமரந்திரத்திலுள்ளது ஸஹஸ்ரதள பத்மமானாலும், 125 சிறு தளங்க ளடங்கிய அஷ்டதள பத்மமேயாம்) தன் உபாஸ்ய தேவதையையாவது, அல்லது, அத் தேவதா சொரூபமே தீபஜ்வாலை போலப் பிரகாசித்துக்கொண் டிருப்பதாகவாவது பாவித்து, மனதை அதில் ஸ்திரமாய் நிறுத்துவதே தாரணையாம். இவவண்ணம் நிறுத்தியபின், தன் உபாஸ்ய தேவதை யன்றித் தானில்லை யென்று, அல்லது அத் தேஜோரூபமே தன் ஆத்மசொரூப மென்று அதாவது, ஸோஹமபாவனையால் தியானிப்பதே தியானமாம். "எங்குமுள்ள பிரஹம சொரூபமே ஹிருதயத்தில் புத்திஸாக்ஷியா யஹமென்ப பிரகாசித்துக்கொண்டிருக்கும்" என்னும் சுருதியால், அங்ஙனமிருக்கும் நான் யார்? என்னும் விசாரத்தால் விசாரிக்கில, ஹிருதய கமலத்தில் ஆத்ம தேவதையானவர் அஹம், அஹம என்று (நான், நான் என்று) தான் தானாய் ஜ்வலித்துக்கொண்டிருப்பர் (ஸ்புரித்துக்கொண் டிருப்பர்). அவ வனுஸந்தானத்திலிருப்பதும் தியானமேயாம. அதிலும் இதுவே சிரேஷ்டம். தன் சக்திக் கேற்றதைச் செய்யலாம். இவ்விதம் தான் செய்யும் தியானத்தின் பரிபாகத்தால், தான் இன்னதென்பதும இன்னது செய்கிறே மென்பதும் தெரியாமல், அதனிடத்

திலேயே மனம் லயித்த, அல்லது, அவ வஹமென்னும ஸ்புரிபபு அடங்கின, அதி ஸூக்ஷமமான ஸ்திதியே ஸமாதியாம் இதில் நித்திரை மாத்திரம வராமல் ஜாக்கிரதையாகப் பாதுகாத்துவநதால, சிரேஷ்டமான சிரேயஸைக கொடுக்கும. இவைகளைத தினநதோறும, கிரமமாய் தன்னுல் இயன்ற வளவு அனுஸநதித்து வநதால, மனோவிசிராநதி ரூபமான சிரேஷ்ட கதியை சீககிரததில ஈச்வரன் அனுககிரகிபபார் அஷ்டாஙகயோகப பிரிவுகளும, அவறறின் விஷயங்களும சாஸதிரங்களில விஸதாரமாய்க கூறியிருப்பதால, வேணடியவளவு சுருககி எழுதலாயிற்று. நன்ருய் விஸதாரமாய அறியவேண்டில், யோகசாஸதிரானுஷ்டானுனுபவமுள்ள பெரியவர்களைக்கேட்டு, விஸதாரமாய் அறிநதுகொள்ளலாம்.

3. **பிரணவம்**:—பிரணவமானது - அகார, உகார, மகார, அாத்தமாததிரை யென்று - மூன்றரை மாததிரைகள் கூடிய ஓங்காரமாம. இவற்றில அகாரம ஜாககிராவஸதை யென்றும, விசுவஜீவ னென்றும, ஸதூலதேகமென்றும, சிருஷ்டி யென்றும்; உகாரம் சொபபனுவஸதை யென்றும, தைஜஸஜீவ னென்றும, ஸூக்ஷமதேகமென்றும, ஸதிதியென்றும், மகாரம் ஸுஷுபதி யென்றும, பிராஞ்ஞ ஜீவனென்றும், காரணதேக மென்றும, சம்ஹாரமென்றும், அாத்தமாத்திரை துரியமென்றும, ஆத்மசொரூப மென்றும், அஹமசொரூப மென்றும; இதற்கபபாற்பட்ட ஸதிதியே, துரியாதீதமாகிய ஆனநதமாததிர சொரூப மென்றும சொலலபபடும மூன்தியானத்திற் கூறிய இந நான்காவதான அஹமசொரூபமே, மற்ற அகார, உகார, மகாரங்களென்னும மூன்று மாத்திரைகள அடங்கியுள்ள அமாததிரை சொரூபமென்றும, மௌன மநதிர மென்றும, அஜபை யென்றும்,

(ஜபியாமல் ஜபித்த லென்றும) பஞசாக்ஷராதி ஸாவ மந திரங்களின் ஸாரமான அதவைத மநதிர மென்றும் கூறப படும். பிரணவத்தின் இவவித யதார்த்த அனுபவம் ஸித திபபதற்கே, முநதிய பிரததியாகாரத்தில் மனேமாததிரம் ஜபிக்கக கூறியிருககிறது.

4. தியானததில, "கைலாயம், வைகுண்டம், பரம பதம முதலனவாயச் சொல்லபபட்ட அஷ்டதளத்தோடு கூடிய, ஸர்வாத்மகமான, ஹிருதய கமலத்தின் மத்தியில அங்குஷ்ட மாததிர பரிமாணமாய், மினனலைப் போல காநதி யுள்ளதாய், தீபஜ்வாலை போலும பிரகாசிககும அவ் வஸதுவைத் தியானிதது, அமிருததத்துவததைப் புருஷன் அடைகிறுன" எனனும சுருதிவாககியப்படியே தியானிககச சொன்னதில, தான்வேறு அதுவேறு என்னும பேத புததியும, பின்னத்தியானமும, வஸதுவில பரிச்சினன புததியும், ஏகதேச புத்தியும உண்டான தாய்த் தோற்றியபடியால, அவைகளை நீகக, அநத ஜ்வாலா காரமே அஹம் அஹமென்று ஸபுரிததுக்கொண்டிருக்கும் நாகிய ஆதமசொருப மாதலால, அன்னியமாய்ப பாவிதத லின்றி, தன்மயமாய்ப பாவிக்கவேண்டு மென றும சொன்னதால, வாக்கியங்களில சமுசயம் தேவை யிலலை. ஸாவ தியானஙகளிலும கடைசியிற் சொன்ன ஆதமததியானமே சிரேஷ்டம அது ஸிததியாலுல் மற்றவை தேவையிலலை, மற்ற தியானங்களும இதில் அநதாபபூத மானபடியாறுன், இது ஸித்திபபதற் காகவே மற்றவைகளும சொல்லபபட்டன. மனப் பரி பாகததுககுத் தகக தியானத்தை அனுஷ்டிககலாம. தியான மாாககங்கள் பேதமாய்த் தோன்றினும் முடி வில் ஒன்றுகவே முடியும. அதைபபறறிச் சஙகிக்கத தேவையிலலை. "தனனை அறிதலே கடவுளை அறிவ

தாகும் தியானிகரும் தன்னை (தன் சொரூபத்தை) அறியாமல், இதரமாய்த் தெய்வ மிருக்கிறதென் றெண்ணித் தியானிபபது, தன்னிழலைக் காலால் அளப்பதற்குச் சமானமாம்; அளகக அளக்கத் தூரமாய்ப் போய்க் கொண்டிருப்பது போல" என்றே சுருதிகள சொல்லுவதால், தானுகின்ற ஆத்மததியானமே சிரேஷ்டம, ஆத்மாவே ஸர்வதேவாத்மக வஸ்து வானபடியால்

---

## X. ஞானுஷ்டாங்கம்

### அவதாரிகை

[இதில, அனைததையும் வஸதுமயமாயப பாரததலாகிய "ஏகமேவாதவைதம் பிரஹ்மாஹம்" என்னும் பாவனையால ஆதமஸாக்ஷாதகாரம் அடையும் ஞானமாாக்கம் சொலலப படுகிறது.]

1. ஞானுஷ்டாங்கத்தின் இயமநியமங்களைப பற்றி இங்கு கூறின் விரிவாகும பிராணுயாமத்தின் ரேசகமானது, தேகாதிப் பிரபஞசத்தின் நாமம ரூபமென்னும் இரண்டு அமிசங்களையும் வெளிவிடுதலாம பூரகமாவது, அவைகளில் அனுஸ்யூதமா யிருககிற சத்து, சிதது, ஆனந்தாமிசங்களை கிரகித்தலாம் கும்பகமாவது அங்ஙனம் கிரகித்த அமிசங்களை உள்ளிருததலாம. பிரத்தியாகாரமாவது, முன்னீககிய நாமரூபஙகள் மனதிற் கலவாமற்காத்தலும; தாரணையாவது, பூரித்த அஸதி, பாதி, பிரிய, சச்சிதானந்தாமிசமே தானுகிய ஆத்ம சொரூப மென்று, மனதை வெளி நாடாது ஹிருதயத்தில் இருத்தலும்; தியானமாவது, முற்கூறியபடி நாம ரூபமான பஞசகோசாதமக பிணடேதகத்தை நாமல்லவென்று அபபடியே இருநதி நானுரென்று விசாரிகக, தான் தானய், நான் - நான் என்று ஸ்புரித்துக்கொண்டிருக்கும் அஹம் சொரூபமாய் இடைவிடாதிருததலுமாம்

இவ்விதப் பிராணுயாமாதிகட்கு ஆசனாதி நியமம் வேண்டுவ தின்று. எங்கிருந்தாலும், எப்போதாகிலும் செய்யலாம். எவ்விதத்தாலும் மனதை ஹிருதயத்தில் ஆதம சொரூப மாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் தெய்வத்தினிடத் தில் நிறுத்தி, அவனை மறவாதிருக்கவேண்டியதே முக்கிய தாற்பரியம், மறதியே ஸர்வ அனாத்தங்கட்கும் மூல மென்றும், அதுவே முமுக்ஷுவுகருக் காலனென்றும் பெரியோர்கள் சொல்லுவதால் முதறசொன்ன பிராணு யாமம் அனுவசியமாவென்றால், அவசியமே. முதலாவது அப்பியாசகாலத்திலும், இரண்டாவது எப்போதும், செய்யச் சகாயமாயிருப்பதால். மறவாதிருத்தல், பிராணு யாமம் இவ்விரண்டின் தாற்பரியமும் மனதை ஹிருதயத் தில் நிறுத்துவதே. ஆகையால், எதுகாலபரியந்தம் மனமானது கேவல கும்பகத்தால், அல்லது விசாரத்தால், ஹிருதயத்தில் அடங்கவில்லையோ, அதுபரியந்தமே ரேசக பூரகம் முதலியவை அவசியம்; அப்பால் அனுவசியம். கேவல கும்பகமாவது ரேசகபூரக மின்றியே பிராணனை ஹிருதயத்தில் அடக்கக்கூடிய தன்மை யோகம், ஞான மாகிய இரண்டில், தனக்குப் பிரியமாய்த் தோற்றுவதை யாவது, அல்லது, இரண்டையுமாவது சமயோசிதமாய் அனுசரிக்கலாம்.

2. மனோநாசமே மோக்ஷமாதலால், ஸர்வ சாஸ்தி ரங்களின் தாற்பரியமும் மனதை அடக்குவதிலேயே. யோகம் ஞான மாகிய இரண்டும் மனோநாசத்தின் முக்கிய ஸாதனங்கள். யோக மென்பது பிராண பந்தனம். ஞான மென்பது அனைத்தையும் வஸ்துமயமாய்ப் பாரத் தல்; அதாவது, “ஏகமேவாத்வைதம்பிரஹ்மாஹம” என்னும் பாவம். அவரவா கர்மானுசாரம், இரண்டி லொன்று சுகமாய்த் தோன்றும். முரட்டு மாட்டுக்குப

புல்லைக் காட்டித் தடவி வசப்படுத்துவதுபோல ஞானமும், அடித்துக் கட்டுவதுபோல யோகமு மென்றே அறிஞா கூறுவர் முக்கிய அதிகாரிகள் வேதாந்த விசாரத்தால் வஸ்துநிச்சய மறிந்து, தன்னையும் ஸர்வத்தையும் வஸ்துமயமாய்ப் பார்ப்பதாலும்; சில மத்திம அதிகாரிகள கேவலகும்பகத்தோடு மனதை ஹிருதயத்திலிருத்தி, நெடுநாள், வஸ்துவைத் தியானிப்பதாலும், சில மந்த அதிகாரிகள் பிராணுயாமம் முதலியவைகளாற் கிரமமாக மேற்படி நிலையை அடைவதாலும மனதை அடக்கிக கதிபெறுவாாகள் இக கருத்தைப பற்றியே, மனதை அடக்கும யோகத்தை ஞானுஷ்டாஙகம், யோகாஷ்டாங்கமென இரண்டாய் வகுத்திருக்கின்றனர். பிராணுயாமம் கேவலகும்பகம ஸித்திககும வரையிற் செய்தாற் போதும. அல்லாவிட்டால ரேசக பூரகஙகள இல்லாமல், கேவலகும்பகததையே மெதுவாய் விசாரததோடும் அபபியஸித்து, மனதை ஹிருதயத்திலிருத்தி, நிரநதரததியானரூப பகதியால, ஸமாதி ஸாக்ஷாத்காரங்களை அடையலாம. ஸஹஜமாய்விட்டால், வியவகார காலம போக, மற்றக காலஙக ளெல்லாம அனுஷ்டிககலாம. இடமும் தேடவேண்டிய திலலை எது சௌகரியமாய்த் தோன்றுகிறதோ, அதை அனுஷ்டிககலாம். மனம் கிரமமாக அடஙகினுல் மறற விஷயஙகளை இருநதாலும போனுலும அககரையிலலை. கீதையில, பகவானும யோகிகளைக் காட்டிலும பக்தன் சிரேஷ்டனென்றும, மோக்ஷகாரணசாமககிரியானது ஸவஸவரூபமான ஆதமானுஸநதானரூப பகதியே யென்றும சொலலியிருபபதால, எபபடியாவது நிரநதரமும மனதை அவரிடததிலேயே இருததிவிடும் தீரம் பெற்றுவிட்டால, மற்ற விஷயங்களைபபற்றிப பயபபடுவானேன்?

# XI. சந்யாசம்

## அவதாரிகை

[இதில ஸங்கறபததியாகமே சநயாசமென்று சொலலபபடுகிறது.]

நானென்னும ஸஙகற்பத தியாகமே சநயாசமன்றி வெளிவிஷயங்களை விடுவதல்ல இநத சநயாசமுள்ளவன் ஏகாங்கியானாலும, அபார சமசாரத்தில் இருநதாலும், அவனுககு இரண்டும் ஒன்றாகவே தோன்றும். உதாரணமாக "வேறுவிஷயத்தில் மனதைச செலுத்தியிருக்கும்போது, பக்கத்திலுளளது தோன்றாததுபோல, ஞானி எவவளவு வியவகாரஙகள செய்யினும, நான் என்பது உண்டாகாமல, தன்னிடத்தில் மனதிருப்பதால், ஒன்றும் செய்யாதவனேயாம தானசையாமல் படுததிருநதும கனவில தலைகீழாய் விழுவதாய்க் காணபதுபோல, அஞ்ஞானி (நான் என்பதறாதவன்) ஏகாநதனாய், ஸதா நிஷ்டையிலிருநதாலும, ஸர்வ வியவகாரஙகளுஞ செய்தவனே யாவன்" என்று வஸிஷ்ட வாக்கியம.

# XII. முடிவு

ஸாத்விக ஆகார முட்கொண்டு, திடமுயற்சியுடன் ஸாவானாத்தத்துககும ஹேதுவான நானென்னும மனோ வியாபாரத்தை நீககிவிடுவது நம்மால் இயன்ற காரியம. நான் என்பதை யன்றி நினைபபும், நினைப்பை யன்றிப பிரமையு முணடாகுமா? ஆகலின்,

ஆன்மத் தியான மனவரதஞ செய்துநீ
மேன்மையாம வீட்டின்ப மேவு.

இதுவே யிநநூற் கருதது.

விசாரசஙகிரகம
முற்றிறறு

ஓம்

ஸ்ரீ ரமணபரமாத்மனே நம:

# உபதேசமஞ்சரி

## மங்கலம்

நேரிசைவெண்பா

*ஆக்கலா தித்தொழில்க ளாற்றியுமெ ளத்தனையுந்*
*தாக்கிலா துள்ளதனைத் தந்துயிரைக் - காக்குஞ்*
*சுகரமணன் வாக்கைத் தொகுத்திடற் கன்னோன்*
*றுகளாறுநற் றாளே துணை.*

## நூன்மகிமை

1. ஸ்ரீ அநாதி அகண்ட சச்சிதாநந்த பரப்ரஹ்மமே தாமாய் விளங்கும் பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளுடைய செவ்விய பாதாம்புயங்களைத் திரிகரணங்களாலும் பணிந்து, அன்னாருடைய திவ்யோபதேச மணிமலர்களை, வித்துவான்களால் விரும்பத்தக்க உத்தமவதிகாரிகளான முமுக்ஷுக்க ளணிந் துய்யவெய்தற் பொருட்டு, 'உபதேச மஞ்சரி' என்னும் இந்நூலாக அணிபெறச் செய்கின்றேன்.

2. எம் மகாபுருடருடைய எவ்வுபதேச வாக்கியங்களால் அடியேனுடைய சந்தேக விபரீதங்க ளனைத்தும் ஆதித்தன்முன் அந்தகாரமென ஒருங்கொழிந்தனவோ, அம் மகாபுருடரான ஸ்ரீ ரமண மஹர்ஷிகளது அவ்வமுத மொழிகளின் சாரசங்கிரகமே இந்நூலின் வடிவாம்.

3. சர்வ வேதாகமங்களின் சிரமாகவும அகமாகவும் விளஙகுவ தெதுவோ அநத நிததிய ப்ரஹமமே இந்நூலின் பொருளாம்

4 எலலா வுபநிடதஙகளாலும புகழப்படும் மேன்மை பொருநதிய பரஹமவித்துக்களா லடையத தகுநத வுயாநலனெதுவோ ஒப்புயாவறும புருடசாக்ஷாத காரமான அநத ஆன்மசித்தியே இநநூலின் பரமபபிர யோசனமாம.



# நூல்

## உபதேசப்பிரகரணம்

1 சற்குருவியல் யாது ?

சொரூபததிற் றிரநிலையுடைமை, அபேத திருஷ்டி யுடைமை, எபபோதும் எவ்விடததும் எககாரணத்தாலுங் கலஙகாத தீரமுடைமை யாதியவாம்.

2. சற்சீடவியல் யாது ?

துககநிவிருத்தி சுகபராப்திகளில அளவற்ற விருப் பும் மற்றெவ்வகைப பேற்றினும் அததியநத வெறுப்பு முடைமை.

3. உபதேசவியல் யாது ?

* உபதேசமென்பதற்குப பொருள சமீப இடம என்பதாம. அதாவது சதது சித்து ஆநந்தமென்னு மிலககணஙகள் எதனைப பிரதிபாதிககின்றனவோ அவ விலக்கியப பொருளாகிய குரு, (தனது ஸவபாவ) நிலையி னின்றும பிரிவுற்று சதா விடயபரிணமஙக ளடைநது சுக துக்கங்களா லடிபட்டுத் தளர்வெய்தும ஜீவனாகிய சீடனை

* உபதேசம் - உப + தேசம் ; உப - சமீபம், தேசம் - இடம்.

அங்ஙன மகலவொட்டாது எப்போதுந தன்னிலையி லபேத மாகப பொருநதச் செய்தல்

மற்றும ‘சேய்மைப் பொருளை யண்மையிற காட்டல’ என்பதும் பொருநதும. அதாவது எது தூரமாகவும் தன்னி லன்னியமாகவும உள்ளதெனச சீடனாற் கருதப் படுகின்றதோ அநத பரஹமம் சமீபமாகவும அனன்னிய மாகவும உளளதென்பதை யுணாததலாம்.

**4 குருநிலையென்ப தான்மநிலையே யெனின், எத்தகைய மேலான பண்டிதனாயினும் அணிமாவாதி பெற்ற சித்தனாயினும் குருகடாக்ஷத்தாலன்றி ஆன்மசித்தி பெறக்கூடாதென்ற சித்தாந்தத்தி னிரகசியம் யாது ?**

பாரமார்த்திகத்தில் குருநிலையென்பது தன் (ஆன்ம) நிலையே யெனினும, அஞ்ஞானத்தால் ஜீவத்வ மடைநதுள்ள ஆன்மாவுககு குருகடாக்ஷததா லன்றி ஸ்வபாவ நிலை விளஙக லரிதாகலான் அங்ஙனங கூறபபடுகிறது

சற்குரு சாந்நித்ய பலத்தாலேயே சகல விருததிகளு மடஙகி நிற்றலும, கல்விககடலைக கரைகண்டனமென் றிறு மாநதுள்ளா னொருவனையும, செயற்கரியனவுஞ செய்ய வலலேமென் றிறுமாந்துளளா னொருவனையும், முறையே கலையனைதது மொருங்கு கற்ற நின்னைக கற்றனையோ? அருளுசெயலு மாறறவலல நின்னைக் கண்டனையோ? என வினவின் தலை குனிந்து வாளாவிருத்தலுமே, முறையே குருவநுகரகத்தாலேயே தன்னை யறிதல் கூடுமெனற்கும வேறெததகைய சாமர்ததியங்களாலும அது கூடாதெனற் கும போதிய சான்றாகும.

**5 குருவநுக்ரஹவியல் யாது ?**

அது மனவாககுகட் கடங்கியதன்று.

6 அங்ஙனமாயின் சீடன் குருவருளாற் றன தேதார்த்த நிலையை யறிகிருனென லெங்ஙனம்?

அது யானை சிமம சொப்பனத்தால ஜாககிரம பெறு தலை யொச்கும. எங்ஙனம சிஙக தரிசனமாத்திரத்தா லேயே யானை உறககததினின்று விழிபபுறுகின்றதோ அங்ஙனமே குருவின் கிருபாவீக்ஷண்ய மாத்திரததா லேயே சீடனும அஞ்ஞான வுறககததினின்று மெயஞ ஞான விழிபபுறுதல் நிசசயம.

7 சாவேச்வர சொரூபமே சற்குரு சொரூப மென்பத னுண்மை யாது?

எநத ஜீவன் மெய்ஞ்ஞான நிலை அல்லது ஈசவர பதத்தை விருமபி சர்வதா பகதி செய்கிறதோ அநத ஜீவ னுககு சாக்ஷியாகவும அனன்னியனுகவுமுள்ள சாவேச் வரனே அநத பக்தியின் பரிபாக நிலையில் இயலபாகத் தனக் குள்ள சத்துசித்துஆனநத மென்னும மூன்றம்சஙகளோடு கருணையால் நாமரூப மென்னும மற்றிரண் டம்சஙகளுங் கொணடு மனிதனுய் வெளிவநது அநுகரஹ வாயிலாக ஜீவ னைத் தன்மய மாககிககொளளல சிததாநத மாகலான் குருவை ஈச்வரனுகக் கூறுதல பரமாாத்தமே.

8. குருவின்றியே சிலபெரியோர்கள் அறிவறிந்தமைதற் குக் காரணம் யாது?

சில பககுவிகளுககு அவவீசன் அறிவுக்கறிவாக நின்று தத்துவததை யுணாததலுமுண்டு.

9. பக்தி அல்லது சித்தாந்தமார்க்கத்தின் முடிவேது?

திரிகரண சுததியுடன ஆண்டானடிமையாகச் செய்து வரும நிட்காமபகதியின் முடிவில் தன்னுடைய செயலக ளென்பன வெல்லாம் தலைவனுடையவை யாகவே முடி

கின்றன என்ற வுண்மையை உள்ளவா றுணர்ந்து சுதந்தர (மமகார) மற்று விளங்கலாம். சைவ சித்தாந்திகள் கூறும பரபக்தி, இறைபணிநிற்றல் என்பவற்றுக்கும பொருளிதுவே.

10. ஞானம் அல்லது வேதாந்தமாரக்கத்தின் முடிவெது?

நானென்பது ஈச்வரனையன்றி வேறுகவில்லை யென்ற தத்துவ முணர்ந்து கர்த்ருத்வ (அகங்கார) மற்று விளங்கலாம்.

11. இவ்விரு மார்ககங்களுக்கும் முடிவொன்றேயென்பது எவ்வாறு?

எவவாற்ருனும அகங்கார மமகாரங்களின அழிவே வீடாகலானும், அவவிரண்டும ஒன்றையொன்று ஆசரயித்து விளங்கலான் ஒன்றினழிவே மற்ருென்றி னழிவுக்கு ஏதுவாகலானும, மஞேவாககுகட் ககோசரமாகிய மோனநிலை யெய்தற்கு அகஙகாரததைப போக்கற்கான ஞானமார்க்கம, மமகாரத்தைப போக்கறகான பக்தி மார்க்கம் ஆகிய இவ்விரண்டுள் ஒன்றே போதுமாகலான் பக்தி ஞான மாரக்கங்களுக்கு முடி வொன்றே என்பதிற சமசயமில்லை.

குறிப்பு :— தானுள்ளவரையில் தலைவனையு மேற்பதே யாவாககு முடன்பாடாம. தற்போதமிழநத சாயுச்சிய பததைத எளிதாகப் பெறவேணடின், முடிவுவரை இங்ஙனம் கொள்ளலே தகுதியாம.

12 தற்போதவியல் யாது?

நான நானென்னு மகஙகாரவடிவ ஜீவனே தற்போதமெனப்படும. சித்தாகிய ஆன்மாவிற்கும நானென்னுமெண்ணமில்லை; ஜடமாகிய தேகத்திற்கும் நானென்னு

முணர்வில்லை. சிச்சடங்களாகிய இவ்விரண்டுகளு மிடையில் அவாந்தரமாகத் தோன்றி விளங்குவதான இம்மாயா ஜீவனே சகல அனர்த்தங்கட்கும் மூலமானதால் எவ்வுபாயததாலேனும இதை நாசமாக்கிவிட்டால, உள்ளது உளளபடியே விளஙகும. இதுவே மோக்ஷ மெனப்படுகிறது.

உபதேசப்பிரகரணம்

முற்றும்



## அப்பியாசப்பிரகரணம்

1. அப்பியாசவியல் யாது?

எவன் ஆன்மசொரூபத்தை சாக்ஷாத்கரிக்க முயல்வானோ அவனிலும் அவ் வான்மவஸ்து வேறாக வின்மையானும், அவனுக்கன்னியமாகவு முயர்வாகவும் அவனடையத்தக்க வஸ்து பிறிதொனறு மின்மையானும், ஆன்ம சாக்ஷாத்கார மென்பது தனது சாக்ஷாத்காரமே யாகலானும், முமுக்ஷுவானவன் நித்தியாநித்திய வஸ்து விவேகத்தால் தன்னை தார்த்த நிலையை சநதேகவிபரீதங்களறத் தெரிநது எபபோதும் தனது ஸ்வபாவஸதிதியினின்று மாறா திருத்தலே ஞானாப்பியாச மெனப்படுவதாம். ஸ்வரூப சாக்ஷாதகாரத்துக்குக கருவி யெனப்படும் விசார மிதுவே.

2. இந்த விசாரமார்க்கம் எல்லா அதிகாரிகளாலும் அநுஷ்டித்தற் கியலுமா?

பக்குவர்க்கே யியலும்; ஏனையோர் தத்தம் மன நிலைக்குரிய சாதனங்களிற் பழகவேண்டும்.

3. இதர சாதனங்கள் எவை?

துதி, ஜபம், தியானம், யோகம், ஞானமாதியவாம்.

௧. துதி :—ஈச்வரனை யுள்ளுருகி வாயாரப் புகழ்ந்து பாடுதல்.

௨. ஜபம் :—மூர்த்திகளின் நாமங்களையேனும், புநிதமான பிரணவம் முதலிய மந்திரங்களையேனும் வாயை விட்டோ, வாய்க்குள்ளேயோ உச்சரிப்பதாம்.

துதி, ஜபம் ஆகிய இவ்விரு சாதனங்களிலும், மனம் சில சமயம் குவிந்தும், சில சமயம் விரிந்துமிருக்கும் இந்நிலையினர்க்கு மனதின் சலனம் எளிதில் விளங்காது.

௩. தியானம் :—மனதையே வாயாகக் கொண்டு உச்சரிக்கும் ஜபமும் பாவனைகளுமாம். இதில் மனதின் நிலை எளிதிற் புலனாகும். எங்ஙனமெனின், மனம் ஏககாலத்தில் குவிதலையும் விரிதலையு மடையாது. தியானத்தி லிருக்கும் போது விடயங்களிலும், விடயங்களி லிருக்கும்போது தியானத்திலும் பிரவிருத்திப்பதில்லை ஆகவே இந்நிலையிலுள்ளோர் அப்போதைக் கப்போது மனதின் சலனங்களை எளிதிலுணர்ந்து இதர சிந்தனைகளினின்று உடனுக்குடன் தடுத்து மனதைத் தியானத்தில் நிறுத்தக்கூடும். தியானத்தின் பரிபாகஸ்திதியே ததாகாரநிலை யாகும்.

தியானமென்பது மனமுதிக்குமிடத்தில அதிசூக்ஷ்மமாக நடப்பதால், அங்கு மனதின் தோற்றவொடுக்கங்கள் உடனுக்குடன் தெரிவாத லரிதன்று.

௪. யோகம் :—சுவாஸத்திற்கும் மனத்திற்கும் உற்பத்திஸ்தான மொன்றே யாகலானும், இவ்விரண்டிலேதேனு மொன்றொடுங்கின் மற்றதும் முயற்சியின்றியே யொடுங்கு மாகலானும், பிராணாயாம முதலிய சாதனங்களா லுண்டாகும் பிராணலயவாயிலாக மனோலய முண்டாகச் செய்யும் பழக்கமாம்.

யோகிகள் ஸஹஸ்ராரமுதலிய லக்ஷ்யங்களில் மனதை லயிக்கச்செய்து எவ்வளவுகாலம் வேண்டுமானாலும் தேக

ஸமரணை யின்றி யிருப்பர். உள்ளவரையில் ஓர்வித சுகத்தில் மூழ்கியிருந்ததாகவே தோன்றும். என்றாலும், லயித்த மனம் வெளிப்படும்போது வ்யவகாரத்தை யடையுமாகலான் பஹிர்முகப்படுந்தோறும் அதைத் தியானம், விசார முதலிய யாதானுமோர் சாதனத்திற் பழக்கி வந்தால் முடிவில் லயித்தலும் மீளலு மில்லா நிலையினை யடையும்.

ரு ஞானம்:—நிரந்தரம் அப்யசிக்கப்படும் தியானம் அல்லது விசாரத்தால் மனதை ஆன்மாகார மடையச் செய்வதான மனோநாசமாம். மனோநாசமே சர்வமுயற்சிகளும் முடிந்த நிலையாம். இந்நிலையினர் எச்சமயத்தும் தமது நிலையினின்று நழுவார். மோன மென்பதும் சும்மா விருத்த லென்பதும் இந்நிலையே.

குறிப்பு.—க. சித்த வொருமைப்பா டடைதற் பொருட்டே சர்வ சாதனங்களும் அநுஷ்டிக்கப்படுகின்றன. ஏனெனில் நினைத்தல், மறத்தல், விரும்பல், வெறுத்தல், பற்றல், விடல் என்பவாதிய வ்யவகாரங்களனைத்தும் மனோவிகாரங்களே யாகலான், அவையனைத்தும் தன்னிலை யாகா. கேவல நிர்விகார இருப்பு மாத்திரமே தனது ஸ்வபாவமாகும். இங்ஙனம் தனதுண்மையைத் தெரிந்து தானாயிருத்தலையே பந்தநிவிருத்தி யென்றும் கிரந்திநாச மென்றும் சொல்லுகின்றனர். சித்தோபசாந்தி வடிவ இந்நிலை திடப்படுகிறவரையில் 'தன்னை விடாதிருத்தல்,' 'மனதை மற்ற நினைவுகளாற் கெடாதிருத்தல்' ஆகிய இவ்விரண்டுமே சாதகர்க்குரிய இன்றியமையாத சாதனங்களாம்.

உ. மனோலயத்திற்குரிய சாதனங்கள் அளவற்றனவா யுள்ளன வெனினும் அவையனைத்தும் ஒரு முடிவையே யடைகின்றன. எங்ஙனமெனின், யார் யார் எங்

தெந்த லக்ஷ்யங்களில் மனதை யொருமுகப்படுத்துகின்றனரோ, தியான முடிவில மனம் சர்வகற்பனைகளும் நாசமாகப்பெற்று அந்தந்த லக்ஷ்யங்கள மாத்திரமாகவே சேடிக்கக்காண்டலா லென்க இதுவே தியானசித்தியாம. விசாரசீலா விசாரததிறைற் சேடிதத மனதை ப்ரஹமமென் றறிகின்றனா தியானசிலர் தியானத்திற்றேடித்த மனதை தியானலக்ஷ்யமா யறிகின்றனா. இரண்டுக்கும பலமொன்றே யாகலான், எநத சாதனையிலேனும முடிவு வரை இடையறாது முயல்வதே முமுக்ஷுக்களின் கடனும.

4 சும்மாவிருக்கை யென்பது முயற்சியுள்ள நிலையா? முயற்சியற்ற நிலையா?

அது முயறசியற்றதோர் சோம்பல் நிலை யன்று வெளிமுகத்தில் முயற்சிகளென்று சொல்லப்படுகிற உலக வயவகாரங்க ளெவ்வளவும் பரிச்சின்ன மனத்தாலும் இடைவிட்டும் செய்யபபடுகின்றனவே அகமுகத்தில சும்மாவிருக்கை யென்னும ஆன்மவ்யவகாரமோ முழுமனததுடனும் இடையின்றியும செய்யப்படும பூர்ண முயறசியாகும.

வேறெவ் வகையானும் நாசமாகாத மாயையானது முழுமுயற்சி யென்னும இம்மோனத்தாற்றான் நாசமாககப் படுகிறது.

5 மாயையியல் யாது?

எங்கும் எப்போதும் பரிபூர்ணமாய் நிறைந்து ஸ்வயம் பரகாசமாய் ஜ்வலித்துக்கொண்டிருபபதான ஆன்மா வென்னும் உளள பொருளை இல்லாத பொருளாகவும, எப்போதும எவ்விடத்தும் அபாவமென்று நிர்ணயிக்கப் படுகின்ற ஜக ஜீவ பரமென்னும் இல்லாத பொருள்களை

உள்ள பொருள்களாகவும் நினைக்கச்செய்கிற தெதுவோ அதுவே மாயையாம்.

6. ஆன்மா ஸ்வயம்ப்ரகாசமாகவும் பரிபூர்ணமாகவும் விளங்குவதானுல், அது மற்ற வுலக வஸ்துக்கள் போன்று, எல்லோராலும் சாமானியமாய் அறியப் படாமலிருப்பதேன் ?

எங்கெங்கே எவ்வெப் பொருள்கள் அறியப்பட்டா லும், ஆன்மா அங்கங்கும் அவ்வப பொருள்களாகத் தன் னையே யறிநததாகும். ஏனென்றால், அறிவு அல்லது விளகக மென்பது ஆன்ம சத்தியே யாம. ஆன்மா வொன்றே சேதனபபொருள ஆன்மாவுக் கன்னியமான தோா பொருளே யில்லை. உண்டெனின், அவையாவும் அசேதனப பொருள்களே யாகலான், அவை ஸ்வயமாகப பிரகாசிக்கவோ தமக்குள் பரஸபரம அறியவோ அறி படவோ இயலா. ஆன்மா தன்னெதாாத்தத்தை இப்படி யறிந்துகொள்ளாத தோஷததாலேயே ஜீவஸவரூபமாய்ப் பிறவிக்கடலில் மூழகித தத்தளிக்கிறது.

7 ஈச்வரன் ஸாவவியாபகனுயினும், 'அவனருளாலே யவன்றுள் வணங்கல்' என்பதாதிய வாக்கியங்களால், ஈச்வரனை யறிதல் அவனருளாலேயே கூடுமென்பது பெறப்படலான், ஈச்வராநுக்ரஹ மின்றி ஜீவன் தன் சுயமுயற்சியால் ஆன்மஸாக்ஷாத்காரம் பெற லெங்ஙனம் ?

ஈச்வரன் என்பதற்கு ஆன்மாவும் அநுகரஹ மென் பதற்குப் பிரசன்னம் அதாவது விளக்கமும் பொருளாக லான, ஈசவரன் விளஙகாததோர் காலமே யில்லை. உலகெங் கும் தேஜோமயமாய்ப் பிரகாசித்துககொண்டிருக்கும் சூரியவிளக்கம கூகையென்னும் பக்ஷிக்குத் தோன்றுதது

அப்பக்ஷியின் திருஷ்டிதோஷமே யன்றி சூரியனின் தோஷமாகுமா? அங்ஙனமே, ஸதோதயமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆன்மவிளக்கமும் மருளர்க்குத் தோன்றாதது அன்னாரின் திருஷ்டிதோஷமே யன்றி ஆன்மாவின் தோஷ மாகுமா? அநுக்ரஹமே ஸ்வரூபமாயிருத்தலாற்றான் ஈச்வரனுக்குத் திருவருள் என்றதோர் பெயரும் பிரசித்தமாய் வழங்கப்படுகிறது. ஆகவே, நிரந்தரம் அநுக்ரஹத்தையே ஸ்வரூபமாகவுடைய ஈசவரனுக்கு அநுக்ரஹம் செய்வது எனப்பதோர் வேலையுமில்லை: அநுக்ரஹித்தற்கென ஓர் காலமு மில்லை.

8. தேகத்தில் ஆன்மநிலைக்குரிய ஸ்தான மேது?

வலதுமார்பகத்துள்ள ஹ்ருதய ஸ்தானம் பொதுவாகக் குறிப்பிடப்படும். இதற்கநுபவம் என்னை யெனின், தமது இருப்பைப் பிறர்முன் கூறுங்கால் வலது மார்பகத்தைச் சுட்டியே 'நான்' என்றுரைப்பது எவர்க்கு மியல்பாம். ஒரு சிலர் ஸஹஸ்ராரமே ஆன்மஸ்தான மென்கின்றனர். அங்ஙனமாயின் நித்திரை மயக்கமாதிய காலங்களில் தலைசோர்தல் கூடாது.

9. ஹ்ருதயத்தின் ஸ்வரூபம் யாது?

ஹ்ருதயத்தைப்பற்றி வாணிக்கும் சுருதிகள்,

"இருமுலை நடுமார் படிவயி றிதன்மே
லிருமுப் பொருளுள நிறம்பல விவற்று
ளொருபொரு ளாம்ப லரும்பென வுளளே
யிருவிரல் வலத்தே யிருப்பது மிதயம்.

அதன்முக மிகலுள தகமுள சிறுதுளை
யதனிலா சாதியொ டமர்ந்துள திருந்தம

மதனையா சிரித்துள வகிலமா நாடிக
ளதுவளி மனதொளி யவற்றின திருப்பிடம"

(உளளது நாறபது, அனுபநதம்)

எனககூறினும பரமாரததத்தில் ஹருதயமென்ற சொற்குப் பொருள ஆன்மாவே. அது சத்து சித்து ஆனநதம் நித்தியம பூரணம் என்னு மிலக்கணங்களால வயவஹரிககபபடுவதால், அதற்கு உளவெளி, கீழ்மேல என்பவாதிய பேதங்கள கிடையா. சர்வ நினைவுகளும் எவ்விடத்தொடங்குகின்றனவோ அந் நிச்சலமான இடமே ஆன்மநிலை யெனபபடும். அதன் ஸவரூபததை உள்ளவாறு உணர்நதுநிற்குங்கால் அது தேகத்திறகுள்ளிலோ புறம்பிலோ எனபதாதிய ஆராய்சசிகளுக்கு அஙகு இடமிலலை.

10 புறத்தில் விடயசங்கங்க ளில்லாதகாலத்தும் அகத்தில் மனதின்கண் பலவிடயங்கள் தோன்றற்குக் காரணம் யாது?

அவையனைத்தும் பூர்வ ஸம்ஸ்காரஙகளாம. நிச்சலமான தன இருபபுமாத்திர ஸவபாவ ஸதிதியை விட்டு எதிரிட்டறியும ஜீவ வறிவிற்கே அவை புலனாகின்றன. எஙகெங்கே ஏதேது தோன்றினும அஙகஙகும் 'இவற்றைக் காண்பவன் யார' என்று விசாரித்தால், அவையங்கஙகே நாசமுறும

11 சுழுத்தி, சமாதி முதலிய காலங்களி லில்லாத திரிபுடிகள் ஆன்மாவிற கற்பனையாத லெங்ஙனம்?

ஆன்மாவினின்று, முறையே

க. சிதாபாசம், அதாவது ஓர்விதத் தெளிவு,

உ. ஜீவன் (சிதாபாசன்), அதாவது காண்பான் அல்லது முதல் விருத்தி,

ங. காட்சி, அதாவது உலகம், ஆகியன ஒன்றன்பின் னொன்றாய்த் தோன்றுகின்றன

12. ஆன்மா அறிவறியாமைகளற்றதாயிருக்க, அது உணர்வு வடிவாய்த் தேகமுழுதும் வியாபிக்கிறதென்பதும், கரணேந்திரியங்கட்குச் சேதநத்வங் கொடுக்கிறதென் பது மெவ்வாறு?

தேகமுழுமையும் பரவியுள்ள பல நுண்ணிய நாடிக ளுடைய மூலத்திற்கும் ஆன்ம நிலைக்கும் சம்பந்தமுண் டென்றும், இதுவே ஹ்ருதயக்ரந்தியென்றும், தத்துவ ஞானத்தால இக் கிரந்தி பேதிக்கப்படும் வரையில் இச்சட சம்பந்தங்க ளிருக்குமென்றும், அதிசூக்ஷ்மமானதும் கண் ணுக்குத் தெரியாததுமான மின்சாரசக்தி தந்திகளின் வழியாகச் சென்று பற்பல வற்புத காரியங்களைச் செய்வது போன்று ஆன்மசக்தியும் நாடிகளின் வழியாகச் சென்று தேகமுழுமையும் வியாபித்து கரணேந்திரியங்கட்கு அறிவைக் கொடுக்கிறதென்றும், இக்கட்டு அவிழ்க்கப் பட்டால் ஆன்மா யாதொரு விசேடமுமின்றி எப்போதும் இருந்தபடியே இருக்கு மென்றும் பெரியோர் கூறு கின்றனர்.

13 சாமான்யஞானவடிவஆன்மசைதந்யத்திற்கும்விசேட ஞானவடிவதிரிபுடிகட்கும்சம்பந்தமுண்டாவதெப்படி?

இஃதொருவாறு சினிமா (cinema) என்னும் விநோதக் காட்சியின் நிகழ்வினை யொக்கும். எங்ஙன மெனின் :—

| திருஷ்டாந்தத்தில் | தார்ஷ்டாந்தத்தில் |
|---|---|
| க. உள்ளிருக்கும் தீபத்திற் | ஆன்மாவிற்கும், |

கும

| | | |
|---|---|---|
| உ. | தீபத்தை சமீபித்திருக்கும் பூதக்கண்ணாடிக்கும் | ஆன்மாவை சமீபித்திருக்கும் ஸத்வகுண மனத்திற்கும், |
| ௩. | சித்திரத் திரள்களின் கோவையே வடிவான நாடாவிற்கும் | சூக்கும நினைவுகளின் கோவையே வடிவான வாசனைத் தொகுதிக்கும், |
| ௪ | கண்ணாடி, அதிற்றோன்றும் பிரகாசம், தீபம் ஆகிய இம்மூன்றுஞ் சேர்ந்த கண்ணாடிப் பிரகாசத்திற்கும் | மனம், அதிற்றோன்றும் பிரகாசம், ஆன்மா ஆகிய இம்மூன்றுஞ் சேர்ந்த காண்பானல்லது ஜீவனுக்கும், |
| ரு. | கண்ணாடியினின்று வெளிப்பட்டுத் திரையிற்றோன்றும் தீபப்பிரகாசத்திற்கும் | மனத்தினின்று வெளிப்பட்டு இந்திரியவாயிலாகப் பிரபஞ்சத்திற்றோன்றும் ஆன்மப்பிரகாசத்திற்கும், |
| ௬ | திரைவெளிச்சத்திற்றோன்றும் நாநா விசித்திர ரூபங்கட்கும் | பிரபஞ்சவெளிச்சத்திற்றோன்றும் நாநாவித நாமரூப திருசிய பதார்த்தங்கட்கும், |
| எ. | நாடாவையிழுக்கும் யந்திரத்திற்கும் | வாசனைகளைத் தோற்றுவிக்கும் ஈசவரநியதிக்கும் |

சமானங் கொள்ளப்படும்.

கண்ணாடி வழியாய்ச் சித்திரக்கோவைகள்வடிவான நாடா விளங்கும்வரை திரையிலும் தோற்றங்கள் விளங்கல் போன்று, அந்தக்கரணத்தில் வாசனைகளுள்ளவரை ஜாக்ர ஸ்வப்நங்களில் ஜீவனுக்குத் திருசிய பிரபஞ்சங்களுந்

தோன்றிக்கொண்டிருக்கும். கண்ணாடி நாடாவிலுள்ள தினையத்தனையுருவைப் பனையத்தனையாகவும் ஒரு கணத்திற் பல வுருவங்களையும் தோற்றுவித்தல் போன்று, மனமும் அங்குரம்போன்ற வாசனைகளை விருக்ஷம்போன்றும் நொடிப்போதில் எண்ணிறந்த வுலகங்களையும் தோற்றுவிக்கும். நாடாவின் அபாவகாலத்தில் தோற்றங்களின்றி தீபப்பிரகாசம் மாத்திரமே விளங்கிக்கொண்டிருத்தல் போன்று, விருத்திவடிவவாசனையின் அபாவமான சுழுப்தி மூர்ச்சை சமாதி யாதிய காலங்களில் திரிபுடிக ளின்றி ஆன்மப்பிரகாசமாத்திரமே விளங்கிக்கொண்டிருக்கும். தீபம் கண்ணாடியாதிகளைப் பிரகாசிப்பித்தும் தான் மாத்திரம் நிர்விகாரியாகவே இருத்தல் போன்று, ஆன்மாவும் சிதாபாசனாதியவற்றைப் பிரகாசிப்பித்தும் தான்மாத்திரம் எப்போதும் நிர்விகாரியாகவே யிருக்கிறது

## 14. தியானவியல் யாது?

எவ்வவத்தையினும் தன்னிலையினின்று சற்றும் நழுவாமலும் தியானத்திலிருக்கிறே மென்ற நினைவுக்குமிடங் கொடாமலும் ததாகாரமாக நிற்றலாம். இந்நிலையில் அவஸ்தாபேதங்கள் அறப்பறந் தோன்றுமையால் இங்குள்ள வுறக்கமுந் தியானமென்றே கருதப்படும்

## 15. தியானத்திற்கும் சமாதிக்குமுள்ள பேதம் யாது?

ஸ்வப்பிரயத்ந மனோகற்பிதம் தியானமென்றும், அது இல்லாதது சமாதியென்றும் சொல்லப்படும்.

## 16. தியானத்தில் அவசியம் கவனிக்கப்படவேண்டிய அம்சங்களேவை?

ஆன்மாவிலுள்ள ஏகாக்கிர நிலையினின்று சற்றும் நழுவாதிருக்க முயற்சித்தலே ஆன்மநிஷ்டனுக் குரிய

முக்கியக் கடமை. நழுவுங்கால் அங்கே தோற்றமாகும் பற்பல மகிமையக் காட்சிகளாகிய ஒளி வெளியாதிய தோற்றங்களை எதிரிட்டறிவதனுலோ, நாதங்களைக் கேட்பதனுலோ, அகத்தேனும் புறத்தேனும் தோற்றும் மூர்த்தி தரிசனங்களைப் பொருளென்று மதித்தலாலோ ஏமாந்து தன்னை யிழந்துவிடக் கூடாது. திருசியங்களை யறியும் அறிவே ஸத்ய மனறெனின் அறிபடும் பொருள்களாய திருசியங்கள ஸத்யமாத லெங்ஙனம்?

குறிப்பு :—

க. அநாத்ம விசாரணைகளிற் போக்கும் ஒவ்வொரு நிமிடத்தையும் ஆன்மவிசாரணையி லுபயோகித்தால் அதி சீக்கிரத்தில் ஆன்மஸாக்ஷாத்காரம் சித்திக்கும்.

உ. மனத்துக்குத் தன்னிலையிற் பிடிப்பேற்படுகிற வரையில் சாதனைக்கு ஏதேனு மொரு பாவனை அத்தியா வசிய மாகும். இன்றேல், சகலாவத்தையேனும் கேவலாவத்தையேனும் அடிக்கடி வந்து தாக்கும்.

ங. நிர்க்குணோபாசனை யென்று சொல்லப்படும் 'சிவோஹம்,' 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்றல் முதலிய பாவனைகளிலேயே காலத்தைக் கழித்துவிடாமல், அவற்றாலடையப்படும் பிரயோசனமான மனோபலம் வாய்க்கப் பெற்ற பின்னர், உள்ளபடியே தன்னைத் தேடும் பழக்கமாகிய விசாரத்தை மேற்கொள்ளவேண்டும்.

ச. எவ்வாற்றாலேனும் ஒரு விருத்திக்குக்கூட இடந் தராதிருத்தலே சாதனைக்குச் சிறப்பாம்.

17. சாதகன் அனுஷ்டித்தற்கான நியமங்க ளேவை?

மிதாகாரம், மித நித்திரை, மித வார்த்தைகள்.

18. எதுகாறும் சாதனை வேண்டும்?

மனம் முயற்சியின்றியே விருத்தியற்ற நிலையை ஸஹஜமாக அடையும் வரையில், அதாவது அகங்கார மமகாரங்கள் முற்றும் நசிக்கும் வரையில.

19. ஏகாந்தவாசம் என்பதன் பொருள் யாது?

ஆன்மா வ்யாபகவஸ்து வாகலான் அதற்கு ஏகாந்த வாச மென்று தனியானதோ ரிடமில்லை, விருத்தியற்ற நிலையே ஏகாந்தவாச மெனப்படும்.

20. விவேக வியல் யாது?

ஓர்கா லுண்மை யுணர்ந்தபின் வேறொன்றிலும் பிரமைகொள்ளா திருத்தலே விவேகத்திற் கழகு. பரி பூர்ண ப்ரஹ்மத்தில் அணுவேனும் பேத திருஷ்டி யுள்ள வனுக்கே பீதி யுண்டாகிறது. யாவராயினும் தேகபுத்தி யுள்ளளவும் உண்மையை யுணர்ந்தவ ராகார்.

21. ப்ராரப்த வசமாகவே யாவும் நிகழுமேனின் தியா னத்திற் கிடையூறாக சம்பவிக்கும் தடைகளைக் கடப்ப தெவ்வாறு?

ப்ராரப்த மென்பது வெளிமுகத்திற்கே யொழிய உண்முகத்திற் கன்று. உள்ளபடி தன்னைத் தேடுவோன் எவ்வித தடைகளுக்கு மஞ்சான். தடை யென்ற நினைவே பெருந் தடையாம்.

22. சந்யாசாச்ரமம் ஆன்மநிட்டைக்குரிய இன்றியமை யாத சாதனங்களுள் ஒன்றாகுமா?

தேகப்பற்றை நீக்குவதற்குரிய முயற்சியே ஆன்ம நிட்டையெனப்படுகிறது தேகப்பற்றை நீக்குவதற்கோ, பக்குவமும் விசாரமுமே காரண மல்லால் ப்ரஹ்மசாய முதலிய ஆச்ரமங்கள் காரண மாகா. என்னையெனின்,

பற்று மனத் துள்ளது. ப்ரஹ்மசர்ய மாதிய ஆச்ரமச் சின்னங்களோ தேகசம்பந்தமாய் வெளியி லுள்ளன. மனதிலுள்ள பற்றுக்களைத் தேகத்திலுள்ள சின்னங்கள் எப்படித் தவிர்க்கும்? பக்குவ விசாரங்கள் மனதைப் பற்றிய வாகலான் மனதினிடத்தில் அவிசாரத்தால் வந்த பற்றுக்களை அம் மனதின்கட் செய்யப்படும் விசாரத்தா லன்றோ தவிர்த்தல் கூடும். ஆனால் ஸந்யாசஆச்ரம வொழுக்கங்கள் வைராக்கியத்திற்கும், வைராக்கியம் விசாரத்திற்கும் முறையே சாதனங்களாகலான் முமுக்ஷுக்களாற் கொள்ளப்படும் ஸந்யாசஆச்ரமம் வைராக்கிய வாயிலாக விசாரத்திற் கொருவாறு சாதனமா மென்று சொல்லலாம். பக்குவ மின்றி சன்யாசஆச்ரமம் மேற் கொண்டு வாணாள் வீணாக்குவதிலும் இல்லற வொழுக்கத்தால் எவ்வளவோ பலனுண்டு. மனதை ஆத்மா வாகிய தன் யதார்த்த சொரூபத்திற் பொருந்தச்செய்வதற்கு சங்கற்ப விகற்ப வடிவ வ்யாபாரங்களாகிய குடும்பத்தினின்று அதனை விலக்குவதே, அதாவது மனதிலுள்ள சம்சாரங்களைத் தியாகஞ் செய்தலே, ஸன்யாசத்தின் பொருளாம்.

23. கர்த்ருத்வம் அணுவேனு முள்ளவரையில் ஆத்ம ஞானம் சித்திக்கா தென்பதே நியமமாகலான் கிருகஸ்தனாகவுள்ள முமுக்ஷுவானவன் கர்த்ருத்வ மின்றியே தனது கடமைகளைச் செவ்வனே முடித்தல் கூடுமோ?

கர்த்ருத்வத்தைப் பற்றித்தான் காரியம் நடைபெற வேண்டுமென்னும் நியமமில்லாததால், கர்த்தா அல்லது கர்த்ருத்வமின்றிக் கருமம் நடக்குமா என்று சங்கித்தற்கில்லை. கஜானா வுத்தியோகஸ்த னொருவன் நாள் முழு

மையும் தனது வேலையைப் பொறுப்புடனும் சிரத்தை யுடனும் செய்துகொண்டிருபபதாய்ப பிறர் திருஷ்டிக் குத் தோன்றினும், 'இந்தத் திரவியஙகளுககும நமககும் சம்பந்த மில்லை' என்னும் உதாசீனபாவததுடன் கர்த் ருத்வமின்றிய மனத்தனாய்த் தன் கருமத்தைச செவ்வனே செய்து முடித்தல் போன்று, இல்லறஞானியும பாரரப் தானுசாரமாக நிகழும் தனது குடும்பகாரியங்களில உதாசீனபாவத்துடன் நிமித்தமாததிரனு யிருந்துகொண்டு பல காரியங்கள் செய்தல் கூடும் கருமம ஞானத்திற்கும, ஞானம் கருமத்திற்கும் பரஸபரம தடையாகா.

24. தன்னுடைய தேகபோஷணையிலேயே கருத்தின்றிய இல்லறஞானியொருவனால் அன்னன் குடும்பத்திற்கும் குடும்பத்தால் அவனுக்கும் உள்ள பிரயோஜனம்யாது?

தன்னுடைய தேகபோஷணையில் அற்பமுங் கருத் தின்றியவனாயினும் அபபடிப்பட்ட இலலறஞானியின் உழைபபால் அக் குடும்பத்தார் ஜீவிக்கவேண்டிய ப்ரா ரப்தம் அவனுக் கிருக்குமேல் அவன் பரோபகாரியா யிருத்தலும் கூடும். இல்லறவொழுக்கத்தால் ஞானிக் குப் பிரயோசன முண்டோ வெனின், அவன ஏற் கெனவே அவ் வில்லறவொழுக்கங்களை சாதனமாகக் கொணடு எல்லாவிதப் பிரயோஜனங்களின் கூட்டமான தும் மிக மிக மேலானதுமான ஞானபபிரயோசனத்தால் நிரங்குசதிருப்தனாய்விட்டதால் பின்னா அவனுககு அவ் விலலறவொழுக்கத்தால் யாதொரு பிரயோசனமும வேண் டுவதில்லை.

25. சதா பிரவிருத்திவடிவாகவேயுள்ள இல்லறவொழுக் கங்கட் கிடையே நிவிருத்தியும் உபசாந்தியும் வாய்க் குமா றெங்ஙனம் ?

ஞானியின் பிரவிருத்திகள் பரதிருஷ்டியிலுள்ளனவே யன்றி அவன் திருஷ்டியி லின்மையால் அவன் அபார வ்யவகாரங்களைச் செய்துகொண்டிருப்பவ னாயினும் ஒன்றும செய்யாதவனாகவே யிருக்கிறான். ஆகவே, அப்படிப்பட்டவனுக்குப பிரவிருத்திகளால நிவிருத்திக்கும் சாநதிக்கும சிறிதும் தடையில்லை. ஏனெனின் எல்லா தருமஙகளுமு தன்னை யாச்ரயித்திருக்கின்றனவேயொழிய தானொரு தருமததையும ஆச்ரயித்திருககவில்லை யென்ற தத்துவத்தை யறிந்தவனாதலால் அவன், தன்னை யாதார மாகக் கொண்டு நடக்கும் வ்யவகாரஙகள் அவவளவுக்கும் அமைதியுடன் சாக்ஷிமாத்திரனாகவே யிருநதுகொண்டிருப்பான்.

26. ஞானியின் வியவகாரங்களுக்கு ப்ராரப்தமே காரண மாயினும் அவனாற் செய்யப்படும் கருமங்களின் வாசனைகள் மீண்டும் அவனை யொட்டாவோ?

வாசனைக ளனைத்தும் விட்டவனே ஞானியாகலான், கருமஙகளிலேயே பற்றின்றிய அவனைக் கருமவாசனைகள் எபபடிப் பற்றும்?

27. ப்ரஹ்மசர்ய மென்பதன் பொருள் யாது?

ப்ரஹ்மவிசாரமே ப்ரஹ்மசர்ய மெனப்படும்.

28. ஆச்ரமமுறையில் அநுஷ்டிக்கப்படும் ப்ரஹ்மசாய வொழுக்கங்கள் ஞானத்துக்கு சாதனமாகுமா?

ஞானசாதனங்களாகக் கூறப்படும் இயமநியமாதிக ளவ்வளவும் பரஹ்மசர்ய விரதத்தி லடங்கியவே யாகலான் பரஹ்மசாரிகளால் விதிப்படி யநுஷ்டிக்கத்தக்க நல்லொழுக்கங்கள் அவர்களுடைய ஆத்மார்த்த அபிவிருத்திக்கு மிகவும் சகாயமாகவே யிருக்கின்றன.

29. ப்ரஹ்மசாயஆச்ரமத்திலிருந்தே ஸந்யாசஆச்ரமம் மேற்கோள்ளலாமா ?

அதிகாரிகளுக்கு பரஹமசாய முதலிய ஆச்ரமக் கிரமங்கள அவசியமில்லை. ஸவபாவஸ்திதி இன்னதென் றறிந்தவனுக்கு ஆசரமபேதங்களைபபற்றிய திருஷ்டி யின்மையால் அவனுக்கு எநத ஆசரமமுமம சாதக மாகவோ பாதகமாகவோ தோற்றுவதில்லை.

30. வர்ணாச்ரமதர்மங்களினின்று நழுவுவதால் சாதக னுக்குப் பழுதுண்டா ?

ஞானநுஷ்டானமே மற்றெல்லா அநுஷ்டானங்களின் பரமபபிரயோசன மாகலான், நிரநதர ஞானநுஷ்டான முள்ளவன் எந்த ஆச்ரமத்தி லிருநதாலும அதற்குரிய ஒழுககங்களை யநுஷ்டித்தேதீரவேண்டு மென்னும் விதி அவனுக் கில்லை. அப்படிபபட்டவன் வர்ணாச்ரமதர்மங் களை வழுவின்றி நடத்தல் லோகோபகாரத்தின் பொருட் டாம. அவவொழுக்கங்களை யனுஷ்டித்தலால் நயமோ, விட்டுவிடுவதால் நஷ்டமோ அவனுக்கில்லை.

அப்பியாசப்பிரகரணம்

முற்றும்

# அநுபவப்பிரகரணம்

1. சிற்சோதியியல் யாது?

காண்பானுக்குத் தோற்றமாகும்படி நாமரூப வுலகங்க ளெவ்வளவையும் உள்ளும புறம்பும் பிரகாசிப்பிப்ப தெதுவோ ஸ்வயம்பிரகாச சொரூபமான அந்த சச்சித்தாம். அச சிற்சோதியி னிருப்பு அதனால் விளககப்படுகின்ற தோற்றங்களைக கொண்டே யூகிக்கப்படுகிற தல்லால் தனியாக விடயமாவதில்லை.

2. விஞ்ஞானவியல் யாது?

அலையற்ற கடலெனவும அசைவற்ற வாகாயமெனவும் சகலவிருத்திகளு மடங்கியுள்ள நிச்சலமான நிலையெதுவோ சாதகனுக்கு விளஙகக்கூடிய அச் சிநமாத்திரநிலையாம.

3. ஆனந்தவியல் யாது?

சாவ வ்யவகாரங்களு மற்றதும் சுழுப்தியைப்போன்றுள்ளதுமான அவ் விஞ்ஞானநிலையிலுள்ள சுகா (சாந்தா) நுபவமாம. இதனைக் கேவல நிர்விகற்ப நிலை யென்றுங் கூறுவர்.

4. ஆனந்தாதீதவியல் யாது?

வ்யவகாரஙகளற்ற சுழுபதியைப போன்றுள்ள அந் நிலையினின்று நனவிற் சுழுப்தி நிலைபெற்று மாருத சித்தோபசாந்தியுடன் விளங்கும் நிலையாம். இநநிலையில் தேகேநதிரியகரணுதிகளின் சலன மிருநதும், நித்ராமக்ந பாலநியாயம் * போல் அதிற் றனக் கற்பமுந் திருஷ்டி

*உறங்கும் பாலர்கள செயயும் அருநதலாதிய வயவகாரங்கள பிறா திருஷ்டியி லுளளனவே யன்றி அப பாலர்களின் திருஷ்டியி லின்மையால அவாகள் அவ வியவகாரங்களைச் செய்துஞ செயதிலர்.

யின்மையால் இத்தகைய யோகி சாவ வ்யவகாரங்களையுஞ் செய்தும செய்யாதவனாகின்றான். இதனை ஸஹஜநிர்விகற்ப சமாதி யென்றுங் கூறுவர்.

5. சராசர ப்ரபஞ்சங்கள் யாவும் தன்னையே யாச்ரயித்துள்ளன என்பதற் கநுபவம் யாது?

தானென்பதற்குத் தேகியே பொருளாகலானும், சுழுப்தியி லடங்கிக கிடந்த சக்தியானது நானென்ற ஞானத்துடன் வெளிப்பட்ட பின்பே சகல விடயஙகளு மநுபவமாகலானும், காண்பானாகிய தான் அங்கங்கு மிருத்தலானும, தானில்லாவிடத்து அன்னியத் தோற்றஙகள் அற்பமு மின்மையானும, சர்வமும் தன்னிடத்திற் றோன்றி நின் றழிகின்றன வென்பதிற் சிறிதும் சமசய மில்லை.

6. தேகங்களும் அவற்றை யியக்கு மான்மாக்களும் பிரத்யக்ஷத்தில் அங்கங்கு மனந்தமா யிருக்க, ஆன்மா வொன்றே யென்பதற் கநுபவம் யாது?

*தேகோகம்புத்தியையே ஆன்மாவாகக் கொள்ளுகிற பக்ஷத்தில் ஆன்மா பலவே. அவ்வறிவு நசிக்குமிடமே ஆன்மாவாகலான், அங்கு இரண்டாவது பொருளற்பமு மின்மைபற்றி, அங்ஙனங் கூறப்படுகின்றது.

7. ப்ரஹ்மம் மனதிற் ககோசரமாகவும் கோசரமாகவு முள்ள தென்பதற் கநுபவம் யாது?

அது அசுத்த மனதிற் ககோசரமாகவும், சுத்த மனதிற்குக கோசரமாகவு முளளது.

---

*தேகமே நானென்னும் பாவம்: ஹ்ருதயக்ரநதி யென்பதிதுவே. பலவித க்ரநதிகளுள, இநதச சிசசடக்ரநதிபேதமொன்றினலதான் பந்தம் நிவிருத்தியாகிறது.

8. சுத்தாசுத்த மனங்களின் இயல் யாவை?

ப்ரஹ்மத்தினின்று வேறுபட்டு நாநாரூபத்தை யடையும ஆபாச ஸஹித அநிர்வசநீய சக்தியானது எபபோது விவேகத்தால் ஆபாசமற்ற தாகுமோ அப்போது அது சுத்தமன மெனவும், ப்ரஹ்மத்தோடுள்ள அத னைக்கிய ஸதிதி கேவல மெனவும் சொல்லப்படுகின்றன. ஆபாச ஸஹித சக்தி அசுததமனமெனவும, பரஹ்மத்தோடுள்ள அதன் அனைக்கிய ஸதிதி அகேவல மெனவும் சொல்லப் படுகின்றன.

9. தேகாந்தம்வரை தொடருமென்ற ப்ராரப்தத்தைத் தேகமுள்ள போதே கடத்தல் கூடுமோ?

கூடும். எங்ஙனமெனின், பராரபத மெநதக கர்த் தாவை யாசரயிததுள்ளதோ, தேகான்மாக்களுக கிடையே முளைத்த அவ் வகஙகாரம் தன ததிஷ்டானத்தி லடங்கி யுருவழியின் அதை யாச்ரயிததிருந்த ப்ராரபத மாத்திரம் உயிரததிருத்த லெங்ஙனம்? ஆகவே, நானற்ற விடத்து ப்ராரப்த மின்றென்க.

10 ஆன்மா ஸத்தாகவும் சித்தாகவுமிருக்க, அது ஸத் தஸத்துகட்கும் சிச்சடங்கட்கும் விலக்ஷணப்பொரு ளென்பதற் கேது வென்னை?

ஆன்மா ஸத்தாக விருப்பினும் அது எல்லாமா யிருத்தலான் ஸத்து அஸத்து என்ற துவித வ்யவகாரங் கட் கிடங்கொடாதிருத்தற்பொருட்டு ஸத்தஸத்துகட்கு விலக்ஷணமான தென்றும், அங்ஙனமே அது சிததாக விருப்பினும் தானறிதற்கும் தன்னை யறிவித்தற்கும் அன்னியமொன்று மின்மையான் சிசசடங்கட்கு விலக்ஷண மானதென்றும் சொல்லப்படுகிறது.

அநுபவப்பிரகரணம முறறும்

## ஆரூடப்பிரகரணம்

1. ஞானத்தின் ஆரூடவியல் யாது ?

முயற்சியில்லாதிருந்தும ஆன்மாவிற் கலந்த மனம் மீண்டும எப்போதும் உயிர்த்தெழாதுள்ள நிரநிலையாம். அதாவது, ஒவ்வொருவருக்கும ஸர்வ ஸாதாரணமாகவும் ஸ்வபாவமாகவுமுள்ள "நானுடல்ல, மாடல்ல, ஏனையுயிர்களுமல்ல; ஆனால் மனிதனே" என்னும தேகபாவமெஙஙனமோ அங்ஙனமாகவுள்ள "நான் தேக முதல் நாதமீறாகவுள்ள தததுவங்களல்ல; ஆனால் ஸசசிதானநதவடிவ ஆன்மாவே" என்னும ஸஹஜமான ஆன்மப்ரஜ்ஞையே திடஞான மெனபபடுகிறது.

2. ஞானபூமிகளேழனுள் எந்த பூமியி லுள்ளவன் ஞானி யாவான் ?

நான்காம பூமியி லுள்ளவன்.

3. அங்ஙனமாயின், அதறகுமேல் மற்றும் மூன்று பூமிகள் வகுக்கப்பட்டிருப்பதேன் ?

நான்கு முதல் ஏழு பூமிகள் வரையுமுள்ள இலக்கணங்கள் ஜீவன்முக்தியிலுள்ள அநுபவ பேதங்களைப் பற்றியனவே யொழிய, ஞான மோக்ஷ நிலைகளைப பற்றியன வல்ல. ஞானமோக்ஷ நிலைகள் சம்பநதப்பட்ட வரையில் அந நான்கிலும் அற்பமும பேதமில்லை.

4. மோக்ஷநிலை எல்லோருக்கும் பொதுவாயிருக்க சுருதிகள் வரிஷ்டனை மாத்திரம் மிகுதியும் சிறப்பித்ததேன்?

வரிஷ்டனுடைய நிரநதர சுகாநுபவம் சம்பந்தப்பட்டவரை அதற்கேதுவான பூர்வபுண்ய விசேடம்பற்றி அங்ஙனம சிறப்பிக்கின்றனவே யல்லாது வேறில்லை.

5. நிரந்தர சுகாநுபவத்தை விரும்பாதார் எவருமின்மை யால் எல்லா ஞானிகளும் அவ் வரிஷ்டநிலை பெறக் கூடாமைக் கேது வென்னை?

அது கோரிகையாலும் முயற்சியாலும் அடையப படுவ தன்று. ப்ராரப்தமே அதற்குக் காரணம. நான் காம பூமியிலேயே அகங்காரம் மூலதேதோடு நாசமாவதால் அதறகுமேல் ஒன்றை விரும்பவோ முயலவோ, கர்த்தா வாக வுள்ளவர் யார்? முயற்சியுள்ளவரையில் ஞானிக ளாகார். வரிஷ்டனை விசேடித்துக் கூறும் சுருதிகள் மற்ற மூவரையும் அஞ்ஞானிகள என்கின்றனவோ?

6. சில சுருதிகள், கருவிகரணங்கள் அத்யந்தம் நாச மாகப் பெற்ற விடமே பரநிலை எனக் கூறலால், தேகேந்திரியமாதிய ஸகலானுபவங்களு முள்ளவிடத் தில் அந்நிலை பொருந்துமா றெங்ஙனம்?

அங்ஙனமாயின் கேவல சுழுப்தியினும் அந் நிலைக் குள்ள விசேட மொன்று மில்லையே. அன்றியும் ஓர்போ திருநது மற்றோர்போ தில்லாத அதனை ஸ்வபாவ நிலை எனலெவ்வாறு? அது சிலருக்கு மேற்கூறியவாறு ப்ரா ரபத வசத்தால் சிலகாலம் வரையுமோ தேகாந்தம் வரை யுமோ வாய்க்கிறதேயல்லாமல் அதுதான் முடிந்தநிலை யெனல் பொருநதாது. பொருந்துமெனின், இதுகாறு மேற்பட்டுள்ள எண்ணிறந்த ஞானக்ரந்தங்கட்கும் வேதங் கட்கும ஆசிரியர்களாகவுள்ள பெரியோர்களும ஈச்வரனும் அஞ்ஞானிகள என்றன்றோ பொருள்படும். கருவி கரணங்களற்றவிடத்துத்தான உள்ள தென்ற அப் பரநிலை கருவிகரணங்க ளுள்ளவிடத்தி லின்றெனின், அஃது பரி பூரணப் பொருளாமா றெஙஙனம்? ஞானிகளுடைய பிரவிருத்திக்கும் நிவிருத்திக்கும் ப்ராரப்தமே காரண

மாகலான் ஸஹஜநிர்விகற்பநிலையையே முடிவாகப் பெரியோர் கூறுகின்றனர்.

7. கேவல சுழுப்தி நிலைக்கும் ஜாக்ர சுழுப்தி நிலைக்கும் உள்ள பேதம யாது ?

கேவலசுழுப்தி நிலையில் நினைவுகளே யன்றி நனவு (ஔபதியு)மில்லை. ஜாக்ரசுழுப்தி நிலையில் நனவுமாத்திரம உண்டு. அதனால்தான் நனவிற்சுழுப்தி அதாவது நன வுளள சுழுபதி என்று சொல்லப்படுகிறது.

8. ஆன்மா வொன்றே துரியமாகவும் அதீதமாகவும் சொல்லப்படுவதேன் ?

துரியமென்பதற்கு நான்காவது பதார்த்தமென்பது பொருள். ஜாக்ர ஸ்வபன சுழுப்தியாகிய இம் மூன்றவஸ் தைகளில் முறையே மாறிமாறி யுழன்றுவரும் விச்வ தைஜஸப்ராஜ்ஞர்களாகிய ஜீவத்ரயம ஆன்மா வல்ல. அவற்றிற்கு விலக்ஷணமாகவும் சாக்ஷியாகவுமுளள வஸ் துவே ஆன்மா வென்பதை யுணாத்தற்பொருட்டு துரிய மென்றும, இவ்வுணர் வுண்டாகுங்கால் ஜீவத்ரய மபாவ மாவதால் ஆன்மாவுக்கு சாக்ஷித்வமும் அதாவது நான்கா மவன் என்னும் வ்யவகாரமும அபாவ மாதலைக்கொண்டு துரியாதீத மென்றும சொல்லப்படுகின்றதே யன்றி வேறில்லை.

9 சுருதிகளால் ஞானிகளுக் குண்டாகும் பிரயோசனம். யாது ?

சுருதிகள் கூறும் இலக்கணங்கட் கெல்லாம இலக் கியப் பொருளாக விளங்கும் ஞானிகளுக்கு அவற்றால் யாதொரு பிரயோஜனமு மில்லை.

10. சித்திக்கும் முத்திக்கும் சம்பந்த முண்டா?

விசாரஞானமே முத்திதர வல்லது. சித்திக ளெவ்வளவும் மாயாசத்தியின் பொய்த்தோற்றங்களே. நித்திய சித்தியாகிய ஆன்மசித்தியே சித்தி, தோன்றி மறையக் கூடிய மாயாகாரியங்கள் சித்தி யாகா. இவை புகழ் போக மாதியவற்றி னிச்சையால் கோரி யடையப்படுவனவாம். சிலருக்குக் கோரிக்கையின்றியும் பிராரப்தத்தாலுண்டாகிறது. பரஹமத்தோடு தனக்குள்ள ஐக்கிய நிலேயே ஸர்வசித்திகளின் ப்ராப்தியென் றறி. ஐக்கிய முக்தியென்னும் சிரேஷ்டமான ஸாயுஜ்யபத மிதுவே.

11. மோக்ஷசொரூப மிதுவாயின் அது சில சுருதிகளால் தேகத்தோடு சம்பந்தப்படுத்தப்பட்டு, ஜீவன், தேகம் நழுவப்பெறுத வகையிற்றான் முக்திபெறுதல் கூடுமெனக் கூறப்படுவதேன்?

பந்தம் எதார்த்தத்தில் சொரூபமாக இருந்தன்றே முக்தியும் அதன் ஆராய்ச்சி யநுபவங்களும் உளவாதல் வேண்டும். புருடனிடத்து பந்தமென்பது நான்கு காலத்தும் பரமார்த்தமாக இல்லே. அது வெறுஞ் சொன்மாத்திரமே யென்பது வேதாந்த சித்தாந்த முரசாகலான், பந்தத்தைப்பற்றி நிகழும் முக்தி யென்னும் வ்யவகாரம் பந்தமே யில்லேயாயின் நிலேபெறுத லெங்ஙனம்? இவ்வெதார்த்த மோராது பந்தமுக்திகளேக் குறித்துப் பலபட விசாரித்தல் சொரூபமாகவில்லாத மலடிமைந்தனிடத்தும் முயற்கொம்பினிடத்தும் முறையே குணகுணங்கள் நீள நிறங்களாதிய விலக்கணங்களே விசாரித்தற் கொப்பென்க.

12. அற்றேல், சுருதிகளில் வர்ணிக்கப்பட்டிருக்கும் பந்த முக்திகளின் சொரூபங்க ளவ்வளவும் அசங்கதமும் அசத்தியமு மாகாவோ?

*அவை அசங்கதமும் அசத்தியமுமாகா பின்னேயோ வெனின், அவித்தையாற் கற்பிக்கப்பட்டு அநாதியாய் வழங்கிவரும் பந்தமென்னும் மயக்கம் நிவிருத்தியாதற் பொருட்டு வித்தையாற் கற்பிக்கப்பட்டுளதாகும் முக்தி யென்னும் பிரயோகம் அவாந்தரமாக ஒப்பப்பட்டிருப்பதே யன்றி வேறில்லை. முக்தியிலக்கணங்கள் பல விதங்களாகக் கூறப்படலே அது கற்பனை யென்பதற்குப் போதிய சான்றும்.*

13 அங்ஙனமாயின் சிரவண மனனாதிய முயற்சிக ளனைத்தும் வியர்த்தமாமே?

*வியர்த்தமாகா; பந்தமுத்திகளின்றென்பதை சந்தேக மறத் திடமா யுணாவதே ஸாவபரயத்நங்களாலும் அடையத்தக்க மேலான பிரயோசனமாம் அநுபவ பூர்வமாக இல்லாத பந்தமோக்ஷங்களைத் துணிவா யில்லை யெனக் காண்டலாகிய இப் பிரயோசனம் முற்கூறிய சாதனங் களாலன்றிக் கூடாதாகலான் அம் முயற்சிகள் ஸபலமே யென்க.*

14 பந்தமோக்ஷங்க ளில்லையென்பதற் கநுபவ முண்டோ?

*அது அநுபவபூர்வமாக நிச்சயிக்கப்படுகிறதேயல்லால் கேவலம் சுருதிபலத்தா லன்று.*

15. அநுபவ முளதே லெங்ஙனம்?

*பந்தமுக்திகள் கேவலம் புடைபெயர்ச்சிகளே யாம். அவை தமக்கென வேறு சொரூப முடையன வாகா. ஆகவே, அவை சுபாவமாக இயங்கற்பாலன வல்ல.*

வேறொன்றன் பரிணாமங்களாகிய அவற்றிற் காதாரமான தோர் முதலை யொப்பல் வேண்டும். பந்தமுக்திகள் யாருக்கென அம்முதலை விசாரிப்புழி, எனக்கென்றும் நானாரென விசாரிப்புழி, சொரூபமாக நான என்றதோர் பொருளே யின்றெனக் காண்போம். காண்புழி, எஞ்சிய பொருள் தான்றாய் இருந்தபடி யிருந்திலகுவது அங்கைக் கனியாய் விளங்கும். இவ் வுண்மை, புறநோக்கில் கேவலம் வாசாமாத்திரத்தாற் காலம்போக்கலை ஓர் கண மேனும் விட்டு அகநோக்கில் உள்ளபடியிருந்து விசாரிப்பார் யாவர்க்குமே, அநுபவரூபமாகத் தெற்றெனத் தோன்றல் ஸஹஜமே யாகலான்—அநுபூதிமான்க ளெல்லோர்க்குமே தானாகிய ஆன்மசொரூபத்தில் பந்தமுக்திகள் ஓர்போது மின்றென்பது ஒருதலை யென்பதிற் சம்சயமே யில்லை.

16 பந்தமுக்திகள் வாஸ்தவமாக இன்றேல், வாஸ்தவமான சோகமோகங்கள் தோன்றக் கணக்கின்றே ?

ஸ்வபாவநிலையினின்று நழுவுங்கால்மாத்திரம் அவை உண்மைபோலத் தோற்றரவாகின்றனவே யொழிய இயற்கைநிலையில் ஓர்போதுந் தோன்றா.

17 இன்னதுதான் தனது ஸ்வபாவநிலை யென்பதை சந்தேகமில்லாமல் எல்லோராலும் அபரோக்ஷமாகத் தெரிந்துகொள்ளல் சாத்தியமா ?

சாத்திய மென்பதிற் சந்தேகமே வேண்டாம்.

18. எங்ஙனம் ?

பிருதிவி முதல் பிரகிருதியீறாக வுள்ள சராசர ப்ரபஞ்சம் யாவும் அபாவமாகும் மூர்ச்சையாதிய காலங்களிலும் தன்னபாவ மின்றென்பது யாவர்க்கு மநுபவமாக

லான் எல்லோர்க்கும் பொதுவான நித்யாபரோக்ஷமாகிய கேவலம ஸத்து (இருப்பு) மாத்திரமே தனது ஸ்வபாவ நிலையாகும். ஏனைய ஞானுநுபவங்களாகவோ அஞ ஞானுநுபவங்களாகவோ நவநவமாகக் கூறப்படும் புடை பெயர்ச்சிக ளவ்வளவும தன் ஸவபாவஸ்திதிக்கு மாறுன வையே யென்பது தீாவை.

## ஆருடப்பிரகரணம் முற்றும்

பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷிகளது திருவுள வெழுதா மறையினின்று வெளிவநத ஸவாநுபூதிவாக்கியங்களையே வடிவாகக் கொண்ட இந்நூல் துறநதார்தந் தூய்மைமிகு முள்ளங்களைப் பிரகாசிபபிக்கும மெய்ஞ்ஞானப் பொருட் சுடரா யெஞ்ஞான்றும் விளஙகுவ தாம்.

## வாழ்த்து

### நேரிசை வெண்பா

எம்முதலிங் கெம்மையுங்கொண் டேகமாய் மிஞ்சுமோ
மும்முதற்கும் மூலமா மோனமய—வம்முதலாய்
வீடேன் றுஞ் சீ ரமண வேதியன்றுண் மேதினிவாய்
நீடூழி வாழ்க நிலைத்து.

சற்குரு ஸ்ரீ ரமணபகவான் சேவடி வாழ்க

ஓம்

சாநதி: சாநதி: சாநதி:

சுபம்



# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 10 | 15 | கொல்நல | கொள்நல |
| 24 | 11 | யிருளொளி | பிருளொளி |
| 42 | 16 | வரரெங்கன் | வாரெங்கன் |
| 66 | 15 | முறைறவிடா | முறவிடா |
| 67 | 20 | ளித்தரையி | ளித்தரையீ |
| 70 | 11 | வெண்ணவொற | வெண்ணவொரு |
| 72 | 20 | தகுஞகொல் | தகுஞ்சொல் |
| 73 | 14 | மரன்மாவை | மான்மாவை |
| 74 | 23 | தளையுற்று | தனையுற்று |
| 109 | 4 | தன்ளே | தன்னை |
| 113 | 22 | ஜீவமுக்தன் | ஜீவன்முக்தன் |
| 127 | 8 | ஆகசாதி | ஆகாசாதி |
| 132 | 5 | ஆகாதத்தில் | ஆகாசத்தில் |
| 139 | 6 | அகங்காரக பாவனை | அகங்கார சுபாவனை |
| 152 | 2 | சொல்ல | கொல்ல |
| 158 | 21 | லதிருஷ்ம | லதிருக்ஷ்ம |
| 162 | 22 | பரம் | பரப் |
| 166 | 8 | பிரஹமாமந்த | பிரஹமானந்த |
| 172 | 17 | யுபாதிளே | யுபாதிகளை |
| 174 | 24 | பரமானந த | பரமானந்த |
| 175 | 17 | தேசுஅம் | தேசம் |
| 181 | 5 | பிரஹமம்’ | பிரஹம’ |